சோழவந்தானூர் மகாவித்வான்

## ஸ்ரீமத். அரசஞ்சண்முகனார்

இயற்றிய

# வள்ளுவர் நேரிசை

—ooo—

முதல் நூறு செய்யுள் மூலமும்,

மேற்படியாரது மாணாக்கரும,
மதுரை மாணவர் செந்தமிழ்ப் பிரசங்க சங்கத்து அக்கிராசனாதிபதியும,
'விவேகோதயம்'' "ஸ்ரீ சித்ரக்கிளியாய்''
என்னும பத்திரிகைகளின் அதிபரான

## பண்டித ஸ்ரீ: ம. கோபாலகிருஷ்ணையரது

குறிப்புரை, கதை விளக்கம் முதலியனவும.

---


இ. மா. கோபாலகிருஷ்ணக்கோன்

புத்தக வியாபாரம

புதுமண்டபம், மதுரை.

One is really at a loss which to admire—the genius of language that lends itself to these ingenious manipulations, or, the author's mastery over the language.

6. The Pandit's pupils and friends, of whom there are many, (and I am one), will remember with feelings of pride, his simple and child-like habits, his staunch attachment to friends, his sound independent judgment and above all his passionate devotion to ancient Tamil classics, an adequate and convincing proof of which, if proof were ever needed, is the giving away by him on the spot, of the golden § bracelet he was wearing, for the ** '*Nachinarkiniar* Memorial' founded by Pandit. M. Gopalakrishnier of the Madura College, at a meeting presided over by Brahma Sri Mahamahopadyaya Pandit V. Swaminathier Avl.

7. It gives me therefore great pleasure 'that my friend' Pandit: M. Gopalakrishnier, has now published the first part of *Valluvar Nerisai* with his own Explanatory Notes, Illustrative Stories, Facts &c, out of regard for the memory of his esteemed friend and former teacher, *Arasan-Shanmukanar*

8. Pandit Gopalakrishnier is too well known to the Tamil world—(1) by his famous '*Arumporul-Thirattu*,' "*Virekodayam*" etc. (2) by his connection with the various Tamil Sangams in and about Madura, as Lecturer, Chairman, Chief-Examiner, President, Life-President Patron &c. and (3) by his numerous articles to the various papers—to need any appreciative mention from my pen, and I heartily commend this new publication of his, to the Tamil world.

**V. Muthusami Aiyar,** M. A. L. T.,

MADURA, 15—2—19. Personal Asst. to the Inspector of Schools, VII Circle.

* சித்திரகவி; † மாலை மாற்று மாலை; ‡ ஏகபாத நூற்றந்தாதி; § இச்சந்தர்ப்பத்தில் மஹா மஹோபாத்யாய ஐயரவர்கள் கூறிய "ஒத்துக் கொடுத்தல்" "காப்புக்கொடுத்தல்" "தடை நீக்கல்" முதலிய சிலேடைகள் வியக்கப் பெற்றன. ** நச்சினார்க்கினியர் ஞாபகச் சின்னம்.

உ

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

# முகவுரை.

சோமேசர் வெண்பா, இரங்கேச வெண்பா, சிவசிவவெண்பா, வடமலை வெண்பா, தினகர வெண்பா ஆதியன சிலர் பாடியுள்ளதுபோல, எனது நல்லாசிரியர் அரசஞ்சண்முகனார் அவர்களும், இவ் 'வள்ளுவர் நேரிசை' இயற்றியருளியுள்ளார். ஆயினும், இதற்கும், அவற்றிற்கும் ஒரு பெரிய வித்தியாசம் உண்டு: திருக்குறளினின்றும் அதிகாரத்திற் கொரு குறள் வீதம் கொண்டு, அக்குறள் நீதிக் கியைந்த விஷயம் வாய்ந்தவை அவை. இவற்றுள் இரண்டொரு நூல்களே 130 குறட்களுக்கும் உதாரணம் கொண்டு விளங்குவன: சில 108, அல்லது 100 குறட்களுக்கே உதாரணம் கொண்டவை. இங்ஙனம் கதை அமைத்துக் காட்டுவதில், அவற்றை இயற்றியோர் சிலருற்ற பிரயாசை மிகுதியை, ஏற்ற கதைகள் அகப்படாமல் வேறு விஷயங்களால் பல விடங்களில் குறள் நீதி விளக்கப்பட்டிருப்பது கொண்டு நன்கறியலாகும். வள்ளுவர் நேரிசையோ, அதிகாரத்திற்கொரு குறள் வீதம் சேர்த்துச் செய்யப்பட்டதன்று. பின்னிரண் டடியில் வரிசைக் கிரமமாக ஒவ்வொரு திருக்குறளையும், முன்னிரண்டடியில், அக்குறள் நீதிக் கியைந்த ஒரு சரித்திரம் அல்லது விஷயத்தையும், இரண்டாம் அடியின் மூன்றாம் சீராக "வள்ளுவரே!" என

நாயனாரது பெயர் முன்னிலையையும் அமைத்துப் பாடப்பட்டதாகும். ஆயினும், அந்தோ! பிள்ளையவர்களுற்ற நோய், குடும்பவிவகாரம், அசிரத்தை முதலியன அவர் அந்திய காலத்தில் இயற்றி முடிக்கத் துணிந்த இந் நற்காரியம் நிறைவேறாது செய்து விட்டனவே! இது, 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ் நாடு' முன்செய்த தீவினைப்பயனே போலும்!

ஆசிரியர், சிவபதமுற்ற சில தினங்களுக்கெல்லாம், நான், சோழவந்தானுக்குச் சென்றபோதுதான் "வளளுவர் நேரிசை" யைப் பற்றிய விஷயம் அறியலானேன். எனது நண்பரும், பிள்ளையவர்களின் அருமைச் சோதாரும், வரு விருந்து வப்ப நாட்டும் கேசமிக் குடையாருமான ஸ்ரீ: இராமசாமிப்பிள்ளையவர்கள், எனது ஆசிரியரது நூனிலயத்தையும், அவரது கையெழுத்துப் பிரதிகளிற் சிலவற்றையும் காட்டி, அவற்றை என் இஷ்டப்படி செய்து கொள்ள விரும்பினார். இருவகைச் செல்வமும் போதியவாறு எய்திலாயான், அவர்க்கு நன்றி கூறி, கூடிய சீக்கிரத்தில் நான் அவ்வூர் வந்து, ஆசிரியரது ஞாபகார்த்தமாக, அவர் பெயராலேயே ஒரு சங்கம் ஸ்தாபிப்பேன் என்றும், அதற்கு அவரது நூல்நிலயத்தினைப் பயன்படுத்துவித்தல் நலம் என்றும், அங்ஙனம் செய்ய இயலாவிடின், என் சங்க நூல்நிலயங்களுடன், பிள்ளையவர்களுதையும் சேர்த்துக் கொள்வேன் என்றும் கூறி, "வளளுவர் நேரிசை"ப் பிரதியை மட்டும் எனக்கு அளித்துவிடுமாறு கேட்டேன். இராமசாமிப் பிள்ளையவர்களும் அதற்கிணங்கினார். இந் நன்றியை யான் என்றும் மறவேன்.

சின்னாட்களுக்கெல்லாம், அந்நூலுக்கு, அரும்பதவுரை, கதைவிள க்கம், முதலியன எழுதத்தொடங்கி, அவற்றை எனது "விவேகோதய"த் தில் வெளியிட்டு வரலானேன். முதல் நூறு செய்யுட்களையும் அவை சம்பந்தமாக யான் எழுதிய கதை விளக்கம், குறிப்புரை முதலியவற்றை யும் "முதற்பாகம்" ஆக வெளியிட்டுள்ளேன். இப்பதிப்பில் என்னில் சேர்ந்த எவ்வகைப் பிழைகளையும் பொறுத்திடுமாறு அறிஞர்களை வேண்டு கின்றேன். இதில் உள்ள பிழைகள் யாவையும் அறிவித் துதவிபுரிந்த "செந்தமிழ்" உபபத்திராதிபர் ஸ்ரீமத் அ. நல்லசிவன் பிள்ளைக்கு நன்றி கூறுகிறேன். இப் பிழைகளும் திருத்தங்களும் புத்தக அட்டையில் ஒரு பக்கத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளன. ஆதலின், அவற்றை உடனே ஆங்காங்கு திருத்திக் கொள்ளல் நலமாகும். நிற்க.

ஆசிரியரிடத்தும், வள்ளுவரிடத்தும், தமிழிடத்தும், மெய்யபி மானம் வாய்ந்த பெரியோர்கள், இம் முதற்பாகத்தைப்பெற்று, என்னை ஊக்கி, இதன் இரண்டாம்பாகம் வெளிவருதற்காவன புரியுமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

## ஆசிரியரது வரலாற்றுச் சுருக்கம்:

ஆசிரியரது இயற்பெயர் சண்முகம் பிள்ளை என்பதே. அரசப்ப பிள்ளை என்பாரது குமாரராதலின் "அரசஞ்சண்முகனார்" என்னப்பெற்றார். இவர் சோழவந்தானில், வேளாண்மரபில் 1868ஆம் ஸெப்டம்பர்மீ 15உ பிறந்தனர். இவர் தமதூரில் இருந்த ஸ்ரீலஸ்ரீ கந்தசாமிச சாமியாரிடம் கல்வி பயின்று, இலக்கண இலக்கிய ஆராய்ச்சி மிக்குற்று, சோதிடத்திலும் மாதி டத்தின ராயினர். தம் 18-ஆவது வயதில் வயிற்றுவலி மிகுதியால் இவர் வருந்திய காலையில், இவரது ஆப்த நண்பர், ஸ்ரீ அரியூர் எஸ். சாமி நாதையரது நல் விருப்பிற் கிணங்கக் குகன்மீது "மாலை மாற்று மாலை" என்ற ஓர் நூலும், கலம்பகம் ஒன்றும், இயற்றி, அந்நோய் நீங்கப்பெற்றனர். 1890ஆம் முதல், சுமார் 12 வருஷம், மதுரைச சேதுபதி உயர்தர கலா சாலைப் பண்டிதராக இருந்து, பிறகு தமிழ்ச் சிந்தனை பொருது, அதனின் றும் அகன்று, ஸ்ரீ பாண்டித்துரைத் தேவரின் விருப்பிற்கிணங்கி, "சேது பதி செந்தமிழ்க் கலாசாலை"ப்பண்டிதராய் அமர்ந்து, பிறகு இளைப்பாறி, ஆனந்தஆம் மார்கழிமீ 28உ சிவபெருமான் திருவடி நீழலைச சார்ந்தனர்

இவரது பிற நூல்கள்:—முருகக்கடவுள் மீது ஏகபாத நூற்றந்தாதி, பஞ்சதந்திரவெண்பா, இன்னிசை இருநூறு, கலித்துறையில் அந்தாதித் தொடை நிகண்டு, மாலை மாற்று மாலை, மீனாட்சியம்மன் சந்தத் திருவடிப் புகழ்ச்சி மாலை, நுண்பொருட்கோவை முதலியன. திருக்குறளிலும், தொல்காப்பியத்திலும் இவரது ஞானம் அபாரமானது. இவர் அவை சம்பந்தமாகக் கூறும் அதி அற்புதப் புத்துரைகளே இவரது நுணுகிய ஆராய்ச்சியையும் மதிவன்மையையும் விளக்கப் போதியவை யாகும்.

இவரது சரித்திர முழு விவரமும் யான் நடத்தும் "விவேகோதயம்" அல்லது "நச்சினார்க்கினியன்" வாயிலாக வெளி வரும்.

மதுரை,
காளயுக்தி௵
தைமீ 1௳

இங்ஙனம்,
ம. கோபாலகிருஷ்ணன்.

உ

சோழவந்தானூர் அரசஞ் சண்முகனார்
இயற்றிய

# வள்ளுவர் நேரிசை.

## தற் சிறப்புப் பாயிரம்.

திருத்தகு தெய்வத் திருவள் ளுவர்தாள்
வருத்தமறச் சென்னிமிசை வைத்துக்—கருத்திருத்தி
அன்னார் மறைப்பாட்டோ டியானுமரைப் பாட்டிசைப்பேன்
முன்"நே ரிசை"ப்பேர் மொழிந்து.

அரும்பத விளக்கம் முதலியன:— மறைப்பாட்டு—வேதப்பொருளடங்கிய செய்யுள்: தமிழ் வேதமாகிய குறள்; வருத்தம்—இடையூறு. அரைப்

பாட்டு-(முற்பகுதியாகிய) பாதிச் செய்யுள். முன்நேரிசை-முதன்மையாகிய நேரிசை வெண்பா வாலாகிய நூல்: (வள்ளுவர் நேரிசை), அல்லது கேட்கும் வினாவிற்கு வள்ளுவரே முன்னின்று உத்தரமாகக் கூறுவது போற் கூறும் செய்யுள் நூல்.

---

## முதலாவது அதிகாரம்.

## கடவுள் வாழ்த்து.

ஈசன்கண் மூட இருண்ட(து) உலகமென
மாசற்றார் கூறலென் கொல்? வள்ளுவரே!—பேசில்
அகரம் முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு. (க)

(அ-ம் முதலியன்):— என் கொல்-யாது காரணம். "ஈசன்கண்மூட உலகம் இருண்ட"து, விளையாட்டாக உமாதேவியார் பரமசிவன் கண்ணை மூடிய போது. முழுவரலாற்றையும் காஞ்சிப் புராணம்," திருக்கண் புதைத்த படலம்" கொண்டு அறிந்துணர்க.

நான்மறைநூல் கற்றும் நவின்றும் தலைஇழந்தார்
மான்மகனார் என்னேயோ? வள்ளுவரே!—நூன்முற்றக்
கற்றதனால்ஆய பயன்என்கொல் வால்அறிவன்
நற்றாள் தொழாஅர் எனின். (உ)



(அ-ம் முதலியன):— நான்கு மறைகள்-இருக்கு, யஜுர், சாமம் அதர்வம் ஆகிய 4 வேதங்கள்; நவின்றும்-(பிறர்க்கு)உபதேசித்தும்; மால் மகனார்-திருமாலினது குமாரராகிய பிரமதேவன். நூல் முற்ற-சாஸ்திர முழுதும்; வால் அறிவன்-மெய்யறிவுடைய கடவுள். தொழாஅர்-வணங்கார் (கொல்-அசை)

மால் மகன் தலை இழந்தது:—"ஆதியில் ஐந்து தலைகள் பெற்றிருந்த பிரமன், ஒருகாலத்தில் தானே முதற்கடவுள் என்று செருக்குற்றான். பர

மசிவன் அவன் கர்வத்தை அடக்க அவன் எதிரில் வந்த காலையில் அவ னது ஐந்தாவது முகம் சிவனை “நீ எனது நெற்றியினின்றும் தோன்றிய வன். ஆதலின் நீ முதல்வனாவ தெங்ஙனம்?” என்று இகழ்ந்து கூற, சிவ னுக்குக் கோபத்தால் முகம் பொங்கியது. தக்ஷணமே அவரது அம்ச மான வைரவமூர்த்தியால் அச்சிரம் கிள்ளி யெறியப்பட்டது” என்பதாம்.

சாதலுற ஏனோர், தமிழ்மா முனிமுதலாம்
மாதவந்தோர் வாழ்வதென்கொல்? வள்ளுவரே!—ஓதின்
மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். (௩)

(அ-ம் முதலியன):— ஏனோர்-(தவம் முதலியன செய்யாத) மற்றை யவர்; தமிழ் மாமுனி-அகஸ்தியர்; மலர்மிசை ஏகினான்-பக்தர் மனமாகிய தாமரை மலரிடத்து (அவர்கள் நினைத்த மாத்திரத்தில் அவர்கள் குறித்த வடிவுடன் விரைந்து) செல்பவனாகிய கடவுள்; மாண்-பெருமை பொருந் திய; சேர்ந்தார்-இடைவிடாது நினைப்பவர்

“தமிழ்மாமுனி” — என்று ஆசிரியர் கூறியது அவர்க்குத் தமிழ் மொழியாகிய தம் தாய் மொழி யிடத்துள்ள அபிமானத்தை விளக்கி யுள் ளது. தமிழ்ப் புலவர்களுக்கு இத்தகைய அபிமானம் இயற்கையில் உள் ளது என்பதை “கலைமகள் வாழ்க்கை முகத்ததெனினும் மலரவன் வண் டமிழோர்க் கொவ்வான்” என்ற குமரகுருபரர் வாக்காலும், “வண்டமிழ் வாணர்ப்பிழைத்த வான்குடிபோல்...” என்ற புகழேந்திப்புலவர் வாக் கைக் கொண்டும் இன்னோரன்ன பிறர் வாக்காலும் தெளிக.

கல்லை புணையாக் கருங்கடலை நாவரையர்
வல்லை கடந்ததென்னோ? வள்ளுவரே!—சொல்லுங்கால்
வேண்டுதல்வேண் டாமை இலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல. (௪)

(அ-ம் முதலியன):— கல்-கற்றூண்; புணை-தெப்பம்; நாஅரையர்-திருநாவுக்கரசு நாயனர்; வல்லே-விரைவாக; வேண்டுதல் வேண்டாமை இலான்-விருப்பு வெறுப்பற்ற கடவுள்; இடும்பை-துன்பம். சேர்ந்தார்-தியானிப்பவர்.

மருணீக்கியார் என்பவர் சைவராகப் பிறந்தும், ஒருகாலத்தில் க்ஷமண மதத்தைத் தழுவிப் பாராட்டும்படியான நிலையுற்றனர். இவரது சகோதரியான திலகவதியாரது நன்முயற்சியினலும் சிவபக்தியாலும் இவர் நல்வழிப்பட்டு மறுபடியும் சைவந்தழுவி மேம்பாடுற்றார். இது பொறுத க்ஷமணர்கள், அவர்க்குப் பலவிதத்திலும் அரசனைக்கொண்டு கடுந்தண்டனை விதித்தனர். அவையாவும் இவரை எதும் செய்ய முடியாமற்போகவே, க்ஷமணர்கள் சினந்து இவரை ஒரு கற்றூணுேடு சேர்த்துக்கட்டிக் கடலில் எறிய ஏற்பாடு செய்தனர். சிவன்மீது அப்பொழுது ஓர் பதிகம் பாடவே அக்கற்றூணே அவர்க்குத் தெப்பமாகி மிதந்து கரை யேறற்கு ஏற்ற கருவியானது.

☞ நாவரையர் வரலாற்றைப் பெரியபுராணத்தில் விவரமாக அறிக.

> தந்தையார் தாள்எறிந்தும், சாராமை என்னைவினை
> மைந்தர் ஒருவர்க்கு? வள்ளுவரே!—நந்தும்
> இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
> பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு. (ரு)

(அ-ம் முதலியன):— தந்தையார்-எச்சதத்தன் என்னும் அந்தணர். தாள்-பாதம், வினை-தந்தையைத் தாள்எறிந்ததாலான பாபவினை. மைந்தர்-விசாரசருமர். இறைவன் பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு-கடவுளுடைய மெய்க்கீர்த்தியையே விரும்பிப் பலாபேக்ஷை கருதாது கருமம் புரிபவரிடத்தில். நந்தும்-மிகுந்து வருத்துகின்ற

தந்தைதாள் மைந்தன் எறிந்த வரலாறு:— விசாரசருமன் என்னும் அந்தணச் சிறுவன், இடையனொருவன் பசுமந்தையை இரக்கமின்றி அடித்து ஓட்டிச் செல்வதை ஒருநாள் கண்டு வருந்தி, தானே அதனை இனி மேய்த்து வர அனுமதி பெற்று மேய்த்து வந்தனன்: இச்சிறுவன் காட்டி

வந்த அன்பாலும் ஊட்டிய இசையாலும் பசுக்கள் அளவுக்குமிஞ்சிப் பால் அளித்தன. கன்றுகட்கும், ஆதரிப்போர்க்கும் முன்னிலும் அதிகமாகப் பால் கொடுத்தும் அவை மடிதாங்காது பால் சுரந்து கீழே வழிய விட்டு வந்தன. சிறுவன் மண்ணியாற்று மணலினால் தான் ஒரு சிவலிங்கம் உண் டாக்கி, அதற்கு வீணாகக் கீழ்வழிய இருக்கும் பாலைக்கறந்து, அபிஷேகஞ்



செய்து வந்தான். சிறுவனது அந்தரங்கத்தை அறியாத அவனது தகப் பன் ஒரு நாள் இதைக் கண்டு அவன் பாலை வீணாக்குவதாக நினைந்து லிங் கத்தையும் பாற்குடத்தையும் காலால் எற்றி அவனைக் கோபித்தான். உட னே சிவபக்திமிக்க சிறுவன் வாள்கொண்டு தந்தைகாலைவெட்டிவிட்டான். சிவபிரான் அவனது பக்திக்கு மெச்சிச் சண்டேசுரபதம் அளித்தனர்.

☞ விசாரசருமர் வரலாறு முழுமையும் பெரிய புராணத்தால் அறிக.

தாடொழார், சீர்உரையார் சாக்கியனார் கல்எறிந்தும்
வாடாத வீடுறலென்? வள்ளுவரே!—நாடில்
பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார். (௬)

(அ-ம் முதலியன):— தாள் தொழார் – (எவருங்காணச் சிவபெருமா னது) திருவடிகளை வணங்கினவரல்லர்; சீர்–சிறப்பு; வாடாத–அழியாத, வீடு–முத்திஉலகு. பொறி......நெறி–மெய் முதலிய பஞ்சேந்திரியங்களை யும் வழிகளாகவுள்ள ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்னும் ஐந்தி னிடத்தும் செல்லுகின்ற ஆசை ஐந்தினையும் அற வொழித்தவனான கட வுள் கூறியுள்ள நன்னெறியாகிய வேதமார்க்கத்தில்.

சாக்கியனார் வீடுற்றது:— புத்த மதத்திற் பிறந்தும் சிவபக்தியிற் சிறந்த சாக்கிய நாயனார் தமது இனத்தார்க்கு அஞ்சியும், தமது பிறப்பிற் காக வருந்தியும், வெளிப்படையாய் சிவனை மலர்கொண்டு அர்ச்சியாமல், கல்லால் எறிந்து அக்கல்லையே மலராக பாவிக்கும்படி மெய்யன்போடு பூசித்தனர். சிவபெருமான் இவரது பக்திக்கு மெச்சி முத்தியளித்தனர்''

என்பதே.

> பண்டுதவஞ் செய்நும் கவலைப் படலென்னே
> வண்டாரு காவனத்தார்? வள்ளுவரே!—தொண்டாய்த்
> தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
> மனக்கவலை மாற்றல் அரிது. (எ)

(அ-ம் முதலியன):— வண் தாருகாவனத்தார்—வளப்பம் பொருந்திய தாருகாவன ரிஷிகள்; தொண்டாய் – அடியார்களாகி; சேர்தல் – இடைவிடாது நினைத்தல்; மனக்கவலைக்குக் காரணம்:– பிறவிக்கு ஏதுவாகிய காமவெகுளி மயக்கங்களை நீக்காமை. அரிது—முடியாது

தாருகாவனத்தார் கவலைப்பட்ட விவரம்:— ஒரு காலத்தில் தாருகாவன முனிவர்கள் சிவபெருமானை மதியாது நின்றனர். அவர்களுக்கு கற்



புத்தி வருவிக்கவும் அவர்களது மனநிலையை அறியவும் கருதிச் சிவபிரான் ஒரு விட புருஷ வடிவுடன் அவர்கள் இல்லந் தோறும் பலி ஏற்றனர். உடனே அம்முனிவரது பத்தினிமார்கள் கற்புநிலைக்குப் பங்கம் வந்து விட்டது. அதுகண்ட முனிவர்கள் காமவெகுளி மயக்கங்களால் பீடிக்கப் பட்டவர்களாதலின், மனக்கவலை கொண்டு அபிசார யாகம் இயற்றி, நாகம், பூதம், மான், புலி, யானை, முயலகன், வெண்டலை முதலியவற்றைத் தோற்றுவித்துச் சிவனைக் கொல்லுமாறு ஏவினர். இவற்றிற் சிலவற்றை அணிகளாகவும், சிலவற்றை உடையாகவும் சிவன்கொண்டு முயலகனை மிதித்து வெண்டலையைத் தலையிற் கொண்டனர்.

> ஆயிரத்தெட் டண்டமா சாண்டானும் வெஃகியதென்
> மாயாச் சுரர்பதியை? வள்ளுவரே!—ஆயின்
> அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
> பிறவாழி நீந்தல் அரிது. (அ)

(அ-ம் முதலியன):— 1008 அண்டம் அரசாண்டான் – சூரபத்மன்; வேஃகியது என்? – அடைய விரும்பியது யாது காரணம். மாயா – நித்ய மான, சுரர்பதி – தேவர்உலகு: ஆயின் – ஆராய்ந்து பார்க்கின்; அற ஆழி அந்தணன் – அறக்கடலாகிய கருணையங்கடவுள்; பிற ஆழி – (இவ்வுலகில் எய்தக் கூடிய முப்பொருள்களுள் அறம்ஒழிந்த) ஏனைய இரண்டுமாகிய பொருள், இன்பம் இவற்றைப் பற்றிய ஆசைக்கடல்; அரிது–முடியாது.

சூரபத்மன் சுரர் பதியை இச்சித்தது:— மகா வரப்பிரசாதியான இவ்வசுரன் 1008 அண்டங்களை 108 யுகங்கள் ஆண்டதோடு திருப்தி கொள்ளாமல், இந்திராதி தேவரைச் சிறையிலிட்டு அமராவதியையும் ஆள விரும்பினன்.

☞ இவனது முழுவரலாற்றையும் கந்த புராணத்திற் கண்டு அறிக.

*தீர்த்தரும் போற்றும் சிறுவிதிக்காட் டுத்தலைதான்*
*வாய்த்ததென்னோ தன்தலைபோய்? வள்ளுவரே!–பார்த்தக்*
*கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான் [காம்*
*தாளை வணங்காத் தலை.* (௯)

(அ-ம் முதலியன):— தீர்த்தர் – பரிசுத்தமுள்ள பெரியோர்; போற்றும் – புகழும்; சிறு விதி – தக்ஷன்; கோள் இல்–(தத்தமக்கு ஏற்ற புலன் உணர்ச்சிகளைக்) கொள்ளுதல் இல்லாத; பொறியின் – பஞ்சேந்திரியங்களையும் போல; குணம் – பயன், எண் குணத்தான் – ஸ்வதந்தரம், சுத்த



சரீரம், இயற்கையறிவு, முற்றுணர்வு, இயற்கையிலே பாசமின்மை, பேரருள், அழியாவலிமை, அளவிலா ஆனந்தம் ஆகிய இவற்றைக் கொண்ட கடவுள்.

சிறு விதிக்கு ஆட்டுத்தலை வாய்த்தது:—பிரமனது குமாரனாகிய தக்ஷ

னுக்கு அவனது வேண்டுகோட்படி உமாதேவியார் புத்திரியாயினர். தாக்ஷாயணி எனப்பேருற்ற அம்மகளை அவன் சிவபிரானுக்கு மணஞ்செய்து கொடுத்தனன். பிறகு அவருக்கும் தக்ஷனுக்கும் மனஸ்தாபம் நேரவே, மகளையும் மருமகனையும் தக்ஷன் மதிக்கவில்லை. தான் பெரிய யாகஞ் செய்த காலத்தும் சிவபிரானுக்கு அவிர்ப்பாகம் தரவில்லை. அவ்யாகத்திற்குத் தக்ஷன் அழையாமலே உமாதேவியார் தாமே வலியச் சென்றனர். அப்பொழுது தக்ஷன் உமையையும் சிவனையும் இழித்துரைக்கவே, அது பொறுத அம்மையார் அக்கினிப் பிரவேசஞ் செய்தனர். இஃதறிந்த சிவபெருமான் அகோர வீரபத்திரரைத் தோற்றுவித்துத் தக்ஷனையும் அவன் செய்த யாகத்திற்கு உடந்தையாய் இருந்தோரையும் வெவ்வேறு விதமாகத் தண்டித்தனர். தக்ஷன்தலை துணிக்கப்பட்டு யாகத்தீயில் இடப்பட்டது. பிறகு அவன்மேற் கருணை கூர்ந்து ஆட்டுத்தலை ஒன்று அவன்கழுத்திற் பொருத்தப்பட்டது.

சாயா இரணியனும் சாய அவன்இளம்சேய்
மாயாநல் வாழ்வுறலென்? வள்ளுவரே!—ஆயின்
பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார். (ய)

(அ-ம் முதலியன):— சாயா - அழிவடைதற் கருமையான; சாய— இறக்க; சேய்—மகன்: பிரகலாதன்; மாயா—நித்யமான; ஆயின்—ஆராயின்; பிறவிக்கடல்—ஜனன ஸாகரம்; இறைவன்—கடவுள்: சேர் - இடைவிடாது நினை: "நீந்துவர்" என்பதற்கு "இறைவனடி சேர்ந்தவர்" என்பது தோன்று எழுவாய்.

இரணியன் சாய்வும் அவன் சேய் வாழ்வும் உற்றமை:— செல்வம் வலிமை முதலியவற்றால் செருக்குற்றுப் பகவானான விஷ்ணுவைத் துவேஷித்து, யாவரும் தன்னையே வணங்கும்படி செய்துவந்த இரணியகசிபு என்பவனுக்கு, விஷ்ணுபக்தியிற் சிறந்த பிரகலாதன் என்ற ஓர் மகன் தோன்றினன். தன் விருப்பிற்கும் கட்டளைக்கும் விரோதமாக நடந்து கொண்ட மகனுக்கு இரணியன் கொடிய தண்டனை பல விதித்தும் பயன்

படாமற் போயிற்று. பகவத் பக்தியால் எவ்விதத்திலும் அழிவுறாமல் நின்ற அவனைச் சினந்து, இரணியன், "நீகூறும் விஷ்ணு "எங்கும் உளன்"



என்றாயே. இத்தூணில் உளனோ? உளனாயின் என்னெதிரில் வரட்டும்', என்று ஒரு தூணை நோக்கி உதைய பக்தன் சொல்லை மெய்ப்பிக்க அத்தூணினின்றே பகவான் தோன்றி இரணியனை மாய்த்துப் பிரகலாதனுக்கு நித்யவாழ்வு ஈந்தனன். இவ்வரலாற்றைப் பாகவதத்தினின்றும் விவரமாக அறிந்துணர்க.

---

## இரண்டாம் அதிகாரம்
## வான் சிறப்பு.

*மாய்ந்தன மீண்டும் வழிவழித் தோன்றற்கு*
*வாய்ந்தமருந் தியாதோ? வள்ளுவரே!—ஆய்ந்தக்கால்*
*வான்நின் றுலகம் வழங்கி வருதலால்*
*தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று.* (க)

(அ-ம் முதலியன):— வான்-மழை; நின்று - ஓயாமற் பருவகாலங்களில் பெய்து வருவதால்; உலகம் - உலகில் உள்ள சகல சீவராசிகளும், வழங்கி-ஜீவித்து; தான்-அம்மழை; அமிழ்தம்-மரணம் ஒழிக்கும் மருந்து; உணரற் பாற்று-அறிந்துணரத்தக்கது.

*ஊண் அன்றோ காப்ப துடலை. உயர்வானம்*
*மாண் அமிழ்தம் ஆவதெங்ஙன்? வள்ளுவரே!—காணவே*
*துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்*
*துப்பாய தூஉம் மழை.* (உ)

(அ-ம் முதலியன):— ஊண்-உணவு: வானம்-மழை: மாண் - சிறந்த, துப்பார்க்கு-உண்போர்க்கு: துப்பு ஆய-நன்மையாகிய: துப்பு ஆக்கி- உணவுப் பொருள்களை உண்டாக்கி: துப்பார்க்கு - (அவற்றை) உண் போர்க்கு: துப்பு ஆய தூஉம்-தானும் உணவாயிருப்பதும்.

உற்றநோய் நோலா தொளிர்தா மரைமூலம்
மற்றெழுவர் நாடியதென்? வள்ளுவரே!—நற்றவர்க்கும்
விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியன்உலகத்
துண்ணின் றுடற்றும் பசி. (௩)

(அ-ம் முதலியன):— நோய்-வருத்தம்: நோலாது-பொறுக்காமல்: ஒளிர்-பிரகாசமுள்ள; மூலம்-கிழக்கு; நாடியது-விரும்பிச்சென்றது; விண்-



மழை; பொய்ப்பின் - மோசஞ்செய்துவிடுமாயின்; விரி நீர் வியன் உல கத்துள் - விசாலமான கடல் சூழ்ந்த இப்பேருலகில்: நின்று - நிலையாய் நின்று: உடற்றும் - வருத்தும்.

காடன் வரகு கலந்தமண் கொண்டு முன்பு
வாடிஎயில் ஆக்கியதென்? வள்ளுவரே!—நாடுங்கால்
ஏரின் உழாஅர் உழுவர், புயல் என்னும்
வாரி வளங்குன்றிக் கால். (௪)

(அ-ம் முதலியன): காடன் - இடைக்காட்டுச்சித்தர்: எயில்-மதில்: நாடுங்கால்- ஆராயுமிடத்து: ஏரின்-கலப்பைகொண்டு; உழாஅர் -உழுது பயிரிடமுடியாது: புயல்-மழை: வாரி-வருமானம்: வளம் - பயன்: குன் றிக்கால்-'குன்றியக்கால்' என்பதன் குறை.

காடன் வரகுகலந்த எயில் ஆக்கியது:— சோதிடத்தில் வல்ல இடைக்காட்டு சித்தர் கிரகங்களின் நிலைமையை உணர்ந்து இனிவரப் போ கும் பஞ்சத்தை முன்னறிந்து 12 வருடங்கட்கு உணவுப் பொருளாகக் கூடிய வரகை மண்ணொடு கலந்து சுவர்வைத்துக் கோட்டைகட்டிப் பஞ்ச

காலத்தில் அவ்வுணவால் உயிர்வாழ்ந்த விஷயமே இங்குக் குறிக்கப்பட்டதாகும். முழுவரலாற்றையும் புலவர்புராணம் முதலியநூல்களிற் கண்டு கொள்க.

> சின்னாடு வற்கடத்தால் தேய்தலும், பன்னாடு
> மன்னி வளர்தலுமென்? வள்ளுவரே!—உன்னில்
> கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
> எடுப்பதூஉம் எல்லாம் மழை. (௫)

(அ-ம் முதலியன): சில்நாடு–சிலதேசங்கள், வற்கடம்–பஞ்சம், மன்னி–நிலையாக, உன்னில் – யோசித்தால், கெடுப்பதும் – பெய்யாமையால் ஒரு நாட்டினரைக் கேடுறச்செய்வதும், சார்வு ஆய்–துணையாய் நின்று, எடுப்பதுவும்–பெய்வதால் தலைநிற்கச் செய்து காப்பதும்.

> தண்டகன் ஆண்ட தனிநாடு, பின், கானல்
> மண்டுசுரம் ஆயதென்னே? வள்ளுவரே! —தண்டா
> விசும்பிற் றுளிவீழின் அல்லால்மற் றாங்கே
> பசும்புற் றலைகாண் பரிது. (௬)

(அ-ம் முதலியன)– தனிநாடு (மதுமந்தம் என்ற) ஒப்பற்றநாடு: கானல் மண்டு சுரம்– வெப்ப மிகு பாலைவனம்; தண்டா–நீங்காத, விசும்பின்



துளி–மேகத்தினின்று வரும் மழைத்துளிகள்; புல் தலை–ஓர் அறிவு உயிராகிய புல்லினது தோற்றமும்.

தண்டகன் தனிநாடு சுரமானது:— இக்ஷ்வாகுவின் மகனாகிய தண்டகன் தந்தைக்கு மாறாக நடந்துகொண்டமையின், அவனால் விந்தமலைச் சாரலுக்கு ஓட்டப்பட்டான். அம்மலைச்சாரலில் அவன் மதுமந்தம் என்னும் நகரை ஆக்கி ஆட்சி புரிந்து வந்தான். தனது ஆசானாகிய சுக்ரன் மகள் அரசையை வலிதிற் புணர்ந்த குற்றத்தால் அவன் நாடு மழை வளம் குன்றி மண்மாரியால் அழியுமாறு சுக்கிரனால் சபிக்கப்பட்டது.

*மீனீர் மணிமுதல மேவு நெடுங்கடலும்*
*மாநிலத்தைக் காவாதோ? வள்ளுவரே!—ஆறா*
*நெடுங்கடலும் தன்னீர்மை குன்றும் தடிந்தெழிலி*
*தான்நல்கா தாகி விடின்.* (எ)

(அ-ம் முதலியன):— மீனீர்-மீன், நீர், முதல - முதலியன, மேவும்-பொருந்திய, ஆறா-அழியாத, நீர்மை-ஜலசரங்கள் மணிமுதலியவற்றைத் தோற்றுவிக்கும் தன்மை, குன்றும் - குறையும்: தடிந்து - முகந்து சூரிய வெப்பத்தால் நீர் ஆவியுருக் கொண்டு செல்லலாற் குறையும்படி செய்து, எழிலி - மேகம், நல்காதாகிவிடின் - அக்கடலுக்கு மழையாகக் கொடா விட்டால்.

*தள்ளாப் புலவரை "யான் தாங்ககிலேன் போமி"னென்றோர்*
*வள்ள லுரைத்ததென்கொல் வள்ளுவரே!—விண்ணிற்*
*சிறப்பொடு பூசனை செல்லாது வானம்*
*வறக்குமேல் வானோர்க்கு மீண்டு.* (அ)

(அ-ம் முதலியன):— தள்ளா-நீக்கற்கரிய, தாங்ககிலேன்-காப்பாற்ற முடியவில்லையே; வள்ளல்-கொடையிற் சிறந்த அரசன், விண்ணில்-சொல்லு மிடத்து, சிறப்பு-திருவிழா, பூசனை-நித்தியபூசை; செல்லாது-நடவாது, வானம்-மழை, வறக்குமேல்-பெய்யாதாயின்.

வள்ளல் புலவரைப் போமின் என்ற வரலாறு:— சங்கக் காலத்தி லிருந்த பாண்டியருள் ஒருவன், தனது நாடு பன்னிரண்டு வருஷம் பஞ் சத்தால் பிடிக்கப்பட்ட காலத்தில், புலவர்களைக் கூவி "வம்மின்! யான் உங்களைப் புறந்தரகில்லேன். என் தேயம் பெரிதும் வருந்துகின்றது. நீவிர், நுமக்கு அறிந்தவாறு புக்கு நாடு நாடாயின ஞான்று என்னையுள்ளி வம்மின் என்றான்" என்று இறையனார் அகப்பொருளிற் கூறியுள்ள விஷயமே இங்குக் குறித்ததாம்.

*வீதலுறு நாயூனை விண்ணும் படைக்கவல்ல*
*மாதவத்தோன் தின்றதென்னோ? வள்ளுவரே!—ஓதுங்கால்*
*தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்*
*வானம் வழங்கா தெனின்.* (௯)

(அ-ம் முதலியன):— வீதல் உறு-இறந்த, ஊன்-மாமிசம், மாதவத்தோன்-விசுவாமித்திரன்; தங்கா-நிலைநிற்கமாட்டா, வியன்-பெரிய, உலகம்-உலகில், வானம்-மழை, வழங்கு-பெய்.

விசுவாமித்திரன் நாய் ஊன் தின்றது:— காதியின் புதல்வரும் தவவலியால் வேதியரானவருமான இவர் வறட்காலமொன்றிற் பசிக்கொடுமை யாற்றாது நாயூன் உண்டனர். இதன் வரலாறு மணிமேகலை பாரதம் முதலிய நூல்களிற் கண்டு கொள்க.

பெய்யமழை, இந்திரன்பாற் பெட்டான், பொருநையொடு
வையையுடை யானுமென்னோ? வள்ளுவரே!—உய்யவே
*நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்*
*வானின் றமையா தொழுக்கு.* (௰)

(அ-ம் முதலியன):— பெட்டான்-விரும்பினான், பொருநை-தாமிரபரணி, வையை-வைகைநதி, உய்ய-பிழைக்குமாறு, அமையாது எனின்-பொருந்தாது என்போமானால், வான்-மழை, இன்று-இல்லாமல், ஒழுக்கு-நீர் இடையறாது வீழ்தல்.

இந்திரன்பால் மழை வேண்டியது:— மதுரையை ஆண்ட நான்காவது பாண்டியனாகிய உக்கிர குமார பாண்டியன், தனது பாண்டியநாடு மழையின்றித் தவித்த காலையில், இந்திரனிடம் சென்று, மழை வேண்டிய விவரத்தைத் திருவிளையாடற் புராணத்தினின்றும் அறிக.

---

## மூன்றாம் அதிகாரம்.

# நீத்தார் பெருமை.



புண்டரிகத் தானார் புதல்வரடிப் போதணிந்தான்
மண்டின்ற மாலுமென்னே வள்ளுவரே!—தண்டா
ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு. (க)

## நீத்தார் பெருமை. 11

(அ-ம் முதலியன.):— புண்டரிகத் தானார் புதல்வர்—தாமரைமலரில் வசிக்கும் பிரமனது மானச புத்திரராகிய நாரதரது; அடிப்போது—பாதமலர்; மண் தின்ற மால்—பூபாரம் நீக்கிய விஷ்ணு; தண்டா—நீங்காத; ஒழுக்கத்து—தமக்குரிய வருணாசிரம தர்மங்களினின்று; நீத்தார்—முற்றத் துறந்த முனிவர்; பெருமை—பெருமையை; விழுப்பத்து... துணிவு—சிறந்த பொருள் யாவினும் தலை சிறந்தது இதுவே என விரும்பும் நூலினது துணிவு.

பரம பாகவதரான ஸ்ரீமத் நாரதமா முனிவரது பாதபத்மங்களைப் பத்மநாபன் தலையிற் பரிந்து சூடிய பாகவத புராண விஷயமே இங்குக் குறித்துள்ளதாகும்.

காதற் பரவையுழைக் கண்ணுதலே தூதானான்
மாதவத்தோன் மாண்பளவென்? வள்ளுவரே!—ஓதின்
துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்(து)
இறந்தாரை எண்ணிக்கொண் டற்று. (உ)

(அ-ம் முதலியன.):— காதல் - சுந்தரமூர்த்தி நாயனார் காதல் கொண்ட; உழை - இடம்; கண் நுதல்—நெற்றிக் கண்படைத்த சிவபெருமான்; துணை - அளவு; வையத்து—இவ்வுலகில்; எண்ணிக்கொண்டற்று—எண்ணிக் கணக்கிடல் போன்றது. "கொண்டால் அற்று" என்பது

"கொண்டற்று" எனத் திரிந்தது.

பரவையுழைப் பரமன் தூதானது:— ஆரூரிலிருந்த தம் முதல் மனைவியரான பரவையார் அறியாமல், சுந்தரமூர்த்தி நாயனார்,ஒற்றியூரில் சங்கிலியாரை மணந்து, அங்குச் சிலகாலம் தங்கிப் பிறகு ஆரூர்க்குத் திரும்பினர். ஒற்றியூரில் நிகழ்ந்த விஷயம் எங்ஙனமோ அறிந்த பரவை யார் சினந்து 'நாயனார் என்னிடம் வந்தால் உயிர் விடுவேன்' என்னலும், நாயனார் வருந்திப் பரமசிவனிடம் தமது குறையிரந்து வேண்ட, அவர் அர்ச்சனை செய்யும் ஆதிசைவர் வேடம் பூண்டு, அர்த்த ராத்திரியில், இரு முறை பரவையார் பால் தூது சென்று, நயமொழி புகன்று, இருவரையும் சேர்த்து வாழச் செய்தனர் என்பதே.

> தன்னைத் தனிவசிட்டன்; தானைபல கோசிகர்க்கு
> மன்னர்கோன் தோற்றதென்சொல்?வள்ளுவரே.-உன்னின்
> இருமை வகைதெரிந்(து) ஈண்டறம் பூண்டார்
> பெருமை பிறங்கிற் றுலகு. (௫.)

## 12 வள்ளுவர் நேரிசை.

(அ-மீ முதலியன்): தானை-சேனை, மன்னர்கோன்-விசுவாமித்திரன்: கோசிகன்; என்சொல்-யாது காரணம், உன்னில்-ஆராயின், இருமை வகை-பிறப்பு, வீடு என்னும் இரண்டனது துன்ப இன்ப வகைகளை, ஈண்டு-இப்பிறப்பில், அறம்-துறவறம், பெருமை உலகு பிறங்கிற்று-பெரு மையே உலகில் உயர்ந்து விளங்குவதாகும்.

மன்னர்கோன் தோற்றமை:— காதிமகன், கௌசிகன் என்னும் விசுவாமித்திரன், அரசனாயிருந்த காலத்தில் ஓர் நாள் வேட்டையாடிக் களைத்துத் திரும்புகையில் வசிஷ்டர் தமது காமதேனுவைக் கொண்டு அவனுக்கும் அவனது சேனைக்கும் சம்பிரமமாக விருந்தளித்தனர். இக் காமதேனுவை அபகரிக்கக் கௌசிகன் தனது சைநியத்தை அனுப்ப, அச

சைனியமுழுவதும் காமதேனுவினின்றுந் தோன்றிய வீரர்களால் அழிந்தது. பிறகு, கௌசிகன் சினந்து வசிஷ்டரையே எதிர்த்துப் பல அம்புகள் தொடுக்க, அவர், தமது பிரமதண்டத்தை காட்டித் தவத்திலிருக்கவும், அத்தண்டம் படைகள் யாவையும் விழுங்கிக் கௌசிகனையே துன்புறுத்தியது. இவ்வளவும் பிரமதேஜஸுக்கு உரிய சக்தி என்று உணர்ந்து அறிந்து, கௌசிகன் தவமேற் கொண்டு பிரமரிஷி யாகுமாறு வனம் சென்றான். இதன் வரலாற்றை ராமாயண பாகவதங்களில் விரிவாகக் கண்டு உணர்க.

> ஐந்தருவாழ் மங்கை, யருகுற்றும், இந்திரனார்
> மைந்தனிளங் காளையனென்? வள்ளுவரே!—நந்தா
> உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
> வரனென்னும் வைப்பிற்கோர் வித்து. (௫)

(அ-ம் முதலியன): ஐந்தரு—அரிசந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் ஆகிய பஞ்சதருக்களின் நிழலில்; மங்கை—ஊர்வசி, இந்திரனார் மைந்தன்—அர்ச்சுனன், இளங்காளை—(அவளைச்சேர) சம்மதிக்கவில்லை, நந்தா—குறையாத, உரன்—அறிவு வலிமை, தோட்டியான்—அங்குசத்தால், ஓர் ஐந்தும்—பஞ்சேந்திரியமாகிய யானைகளை, காப்பான்—தனக்குத் தீங்கு செய்யாதபடி தடுத்துத் தற்காத்துக்கொள்பவன், வரனென்னும் வைப்பு—மோக்ஷலோகம்.

ஐந்தருவாழ் மங்கை அருகுற்றும் இந்திரனார் மைந்தன் இளங்காளை:—பாண்டவர்கள் வனவாசம் செய்தகாலத்தில் அர்ச்சுனன் பாசுபதாஸ்திரம் பெற்றவுடன், இந்திரன் அவனைத் தேவலோகத்திற்குத் தனது பகைவரை அழிக்கும் நிமித்தம் அழைத்துச் சென்றான், அங்கு ஊர்வசி என்னும் தேவதாசி அவன் அழகைக்கண்டு மயங்கிக் காமுற்றாள். ஆயி

னும் அவன் தன் தந்தையாகிய இந்திரனிடம் இருப்பவன் ஆதலின், அவ னைத் தாய் எனக்கொண்டு தாள்களில் விழுந்து வணங்கி நின்று, அவன் விருப்பிற்கு உடன்படாது நின்றான்" என்பதே.

> ஒன்னார்த் தெறற்கும் உவந்தாரை ஆக்கற்கும்
> மன்னுமிரு சான்றுரைப்பீர் வள்ளுவரே!—தன்னுனே
> ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
> இந்திரனே சாலுங் கரி. (ரு)

(அ-ம் முதலியன):—ஒன்னார்-பகைவரை, தெறற்கும்-அழித்தற்கும்; உவந்தாரை-அபிமானித்தவரை, மன்னும் இரு சான்று-தக்க இரண்டு உதார ணங்கள், ஐந்து அவித்தான்-பஞ்சேந்திரியங்களையும் அடக்கியாளும் திறனு டையவன்: கௌதமன்; ஆற்றல்-வலிமைக்கு, சாலும்-போதும், கரி-சாட்சி.

இந்திரன் கரியானமை:—இந்திரன் கௌதமமுனிவரது மனைவி அகலி கையை இச்சித்து அவளை வஞ்சகமாகச் சேர்ந்தான். கௌதமர் இவ்விஷ யத்தை ஞானதிருஷ்டியால் அறிந்து, உடல் முழுவதும் பெண்குறியடையு மாறு அவனைச் சபித்தனர். பிறகு அவனது பரிதாப நிலைக்கும் வேண்டு கோளுக்கும் இணங்கியும், அவன் செய்த பெருந்தவறு அவனுக்கு என் றென்றைக்கும் ஞாபகத்தில் இருக்குமாறும், "நின் கண்ணுக்கு மட்டும் அவை பெண்குறிகளாகவும், பிறர்கண்களுக்கு அழகிய கண்களாகவும் விள ங்குக" என்று அநுக்ரகித்தனர். இவ்வாறு சாபாநுக்கிரகம் பெற்ற இந் திரன் 1000 கண்ணன் எனப் பேருற்றான்.

> ஆறாப் பிழையுமெண்ணு தாயிரங்கண் ஈந்ததேனோ?
> மாறுனோ? யார்பெரியர்? வள்ளுவரே!—கூறிற்
> செயற்கரிய செய்வார் பெரியர்; சிறியர்
> செயற்கரிய செய்கலா தார். (சு)

(அ-ம் முதலியன):— ஆறு – பொறுத்தற்கரிய, ஈந்தான் – அளித்த கௌதம ரிஷி, மால்-இந்திரன், செய்கலாதார்-செயமுடியாதவர்.

மாலுக்கு ஆயிரங்கண் ஈந்தவரலாற்றை முந்திய செய்யுட்கதை

சொன்ன அறிக.

> 'யானே உலகமெலாம் ஆயினேன்' என்றுகண்ணன்
> வானறியச் சொற்றதென்கொல்? வள்ளுவரே!—காணிற்
> சுவைஒளி ஊ(று)ஓசை நாற்றம்என் றைந்தின்
> வகைதெரிவான் கட்டே உலகு. (எ)

14

## வள்ளுவர் தேரிகை.

(சுவை முதலியன):- கண்ணன்-கிருஷ்ணன், வானவர்-தேவர், ஊறு-ஸ்பரிசம், ஐந்தின் வகை-ஐந்தின் கூறுபாட்டையும், தெரிவான் கட்டே-ஆராய்வானது அறிவைப் பற்றினதே.

தான் பஞ்சபூத வடிவோடுகூடியவன் என்று ஸ்ரீகிருஷ்ணன் அருச்சுனனுக்குக் கீதோபதேசம் செய்தகாலத்தில் கூறியது அறிக.

> பேதைப் பருவப் பிருதையுங் கண்டதென்கொல்
> மாதவத்தோன் தன்பெருமை? வள்ளுவரே!—ஓதின்
> நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
> மறைமொழி காட்டி விடும். (அ)

(அ-ம் முதலியன):-பேதைப் பருவம்-கன்னிப் பருவம், பிருதை-குந்திதேவி, மாதவத்தோன்-துர்வாசமுனி, நிறைமொழி மாந்தர்-அருளிக்கூறினும், வெகுண்டு கூறினும், அவ்வப்பயன்களைத் தவறாமல் தரும் வார்த்தைகளையுடைய துறந்தோரது, காட்டி-பயனால் உணர்த்தி.

பிருதை மாதவத்தோன் பெருமை கண்டது:—தேவமீடனுக்கு மாரிஷையிடம் பிறந்த குந்திதேவி, சின்னஞ்சிறுவயதில் துர்வாசமுனிவர்க்கு ஏவல் புரிந்து வருமாறு தந்தையால் கட்டளையிடப்பட்டவள். கோபத்தாலும், கோபத்தால் வரும் சாபத்தாலும் பிரசித்திபெற்ற அம்முனிவரும் மனங்களிக்க, யாதொரு தவறுமின்றி அவள் நடந்து கொண்டமையின் திரிகாலமுமுணர்ந்த அம்முனிவர், அவள் நன்மையைக்கருதி, "தியானித்த மாத்திரத்திலேயே, சில தேவர்கள் அருளால் புத்திரோற்பத்தி பெறத்

தக்க சில மந்திரங்களை, உபதேசித்தனர். அம்மந்திரத்தைப் பரிசோதிக்கக் கருதி, அக்கன்னிப் பருவத்திலேயே அவள் சூரியமந்திரம் ஜபிக்க, சூரியனது அருளால் கன்னனைப் பெற்றனள். இதுவே இங்குக் குறிக்கப்பட்ட விஷயமாகும். முழு விவரத்தையும் மகா பாரதத்திற் கண்டறிக.

> கோனாக முன்சசிபாற் சென்றோன் குறுகாமே
> மாநாகம் ஆகியதென்? வள்ளுவரே!—ஆனாக்
> குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
> கணமேயுங் காத்தல் அரிது. (௬)

(அ-ம் முதலியன):—கோன் ஆக-தேவேந்திரனது பதவி அடையுமாறு, சசி-இந்திராணி, சென்றோன்-நகுஷன், குறுகாமே-அவளிடம் சமீபியாமலே, மாநாகம்-பெரிய (மலைப்) பாம்பு, ஆனா-நீங்காத, குணம்-துறவு, மெய்யுணர்வு, அவாவின்மை முதலிய நற்குணங்கள், நின்றார்-நின்ற

## அறன் வலியுறுத்தல். 16

முனிவர்கள்று, வெகுளி = கோபம், இழுக்கல் - தவறிச் சொல்லுதல்.
(சமியாமையும் பெருமையும் பற்றிக் குணங்களைக் குன்றெனக் கூறினர்.)

நகுஷன் நாகமாகியது:—சந்திரவம்சத் துதித்த ஆயுவின் மகனாகிய நகுஷன், 100 அசுவமேத யாகஞ் செய்து இந்திரபதவி எய்தற்குத் தகுதியுள்ளோ னாயினன். சப்தரிஷிகள் சுமக்கும் பல்லக்கிலேறிச் செல்லும் போதே, இவன் காமாதுரனாய் இந்திராணியைச் சேரவிரும்பி, "விரைந்து செல்க" எனப் பொருள்பட "ஸர்ப்ப, ஸர்ப்ப" என்றான். பல்லக்குக் கொம்பு தாங்கி, முன் சென்ற அகஸ்தியர் சினந்து, "நீ ஸர்ப்பமாகுக" எனச் சபிக்க உடனே அவன் பாம்பாயினன்.

முழுவரலாற்றையும் திருவிளையாடற் புராணத்திலும், நகுஷன் சாபம் நீங்கிய விதத்தை மகாபாரதத்திலும் கண்டறிக.

கொற்றச் சடபரதன் செய்யான் குலவினைதான்
மற்றந் தணனாமோ? வள்ளுவரே!—முற்றவே
அந்தண ரென்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான். (௰)

(அ-ம் முதலியன.) கொற்றம்–வெற்றி, மற்று அந்தணன் ஆமோ?–குலத்திற்குரிய தொழிலை) செய்யாதிருந்த காலத்தும், பிராமணன் ஆவனோ?; அறவோர்–துறவறத்தில் நின்றவர்கள், செந்தண்மை–சிறந்த இரக்கம்; பூண்டு ஒழுகல்– கொண்டு நடத்தல்

சடபாதர் வரலாறு:— பரதன் என்னும் அரசன், அரசு முதலியன துறந்து தவஞ்செய்கையில், கங்கையில் மிதந்து தத்தளித்துச் செல்லும் மான் கன்றிற்கு இரங்கி அதைக் காப்பாற்றி வளர்த்து, அக்கன்றைப் பற்றிய கவலையுடன் உயிர் நீத்தமையின், மறு ஜன்மத்தில், மானாகவேபிறந்தனர். மீண்டும் இவர் அந்தணராக உதித்தகாலையில், யாவும் உணர்ந்தும் உணராதார்போல், ஜடனாக நடித்தமையின், ஜடபாதர் என்ற பெயர் இவர்க்கு வாய்த்தது.

---

## நான்காவது அதிகாரம்.

## அறன்வலி யுறுத்தல்.

---

செங்கோல் அரசாப்பின் சேர்ந்தார் கயிலையினும்
மங்காத சேரர் கோன் வள்ளுவரே!— பொங்கும்
சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தின் ஊஉ(ங்கு)
ஆக்கம் எவனோ உயிர்க்கு? (௧)

[illegible]

சேரர்கோன் கழறிற்றறிவார்—63 நாயன்மார்களில் ஒருவராகிய பெருமாக்கோதையார் என்பவரே சேரமான் பெருமாள் நாயனார். இவர் ஒருசிறந்த சிவபக்தர் என்பது, உவர்மண் ஊறிய உடம்போடு வந்த வண்ணான் ஒருவனைக்கண்டு, நீறணிந்த சிவனடியார் என நினைத்து அவனை வணங்கின சரித்திரத்தைக் கொண்டே அறியலாகும். இவர் தமக்குக் கிடைத்த அரசுரிமையைப் பிரஜைகள் ஒருவர்மீது ஒருவர் சுமத்தும் "குற்றம் அறிவரிது" என்று அஞ்சி, வேண்டுவதில்லை என மறுத்து விட்டனர். இவரது மனத்தூய்மையைக் கண்ட சிவபிரான், இவர் எவ்விடத்திருந்தாலும் பிறர் பேசிக்கொள்ளும் மொழியை இருந்த இடத்திலிருந்தே கேட்டறியும் படியான சக்தி அளித்து, அவரை அரசாட்சியை ஏற்கும்படி செய்தனர். இதனால் அவர்க்கு "ஜனங்கள் பேசிக்கொள்ளும் பரம ரகசியத்தையும் அறிய வல்லவர்" என்ற பொருள் படும் "கழறிற் றறிவார்" என்ற பெயர் கிடைத்தது. சுந்தரமூர்த்தி நாயனார் வெள்ளையானைமேறிக் கைலை சென்றபோது குதிரை ஊர்ந்து இவர் அவருடன் சென்றனர். இவரது முழு வரலாற்றையும் பெரிய புராணத்தினின்றும் அறிக.

> கீரனும் பூதத்தாற் சிறைப்பட்டான்; கீழ்மைஎலி
> வார்அரசாய் மாறியதென்? வள்ளுவரே!— தேரின்
> அறத்தினூஉங் காக்கமும் இல்லை; அதனை
> மறத்தலினூஉங் கில்லை கேடு. (உ)

(அ-ம் முதலியன):— கீரன்-நக்கீரர், வார் அரசாய்-(திரிலோகங்களையும் ஆளும்) பெரிய அரசனாக, தேரின்-ஆராயின், ஊங்கு-சிறந்த, ஆக்கம்-நன்மை.

கீரன் பூதத்தாற் சிறையுற்றது:—கடைச் சங்கப்புலவரில் தலைமை

பெற்ற தெய்வப்புலவராகிய நக்கீரர் 'மதுரைக் கணக்காயனார் மகனார்!' ஈசனையே எதிர்த்து "நெற்றிக்கண் காட்டினுமே நீற்றிடினும் இக்கவி யிற் குற்றமே குற்றம்" எனக்கூறிய நீரர். சிவபூஜை தவறினோர் 1000பேர் களைப் பிடித்துண்ணத் தீர்மானித்த ஓர் பூதத்தினிடம், இவர் 100-துவது ஆளாக அகப்பட்டுக்கொண்டனர். இதற்குக் காரணம் வருமாறு: ஒரு நாள் இவர் ஓர் பொய்கை அருகே சிவபூஜை செய்கையில், கரையருகில் வளர்ந்திருந்த ஆலமரத்தின் இலையொன்று நீரிற் பாதியும் நிலத்திற்பாதி யுமாக விழுந்தது. நீரிலுற்ற பாகம் மீனாகவும், நிலத்தில் வீழ்ந்த பாகம்



பறவையாகவும் ஆயிற்று. மீன்தண்ணீர்க்கும், பறவை விண்ணுக்கும் இழு த்தது. கீரர் மனம் சிவபூஜையினின்றும் வேறுபட்டு, இதைக் காண்பதிற் சென்றது. இதனால் சிவபூஜைக்குப் பங்கம் வரவே பூதம் இவரையும் உண்ண எடுத்துச் சென்று ஏற்கனவே 99-பேர்களை அடைத்திருந்த ஓர் குகைச் சிறையில் அடைத்து, நீராடி வந்துண்ண நினைத்து சென்றது. இச்சமயம் அவர் "திருமுருகாற்றுப்படை" பாடி, முருகக்கடவுளருளால் தம்மையும் பிறரையும் காத்துப் பூதத்தினின்றும் தப்பினர். இது திருப்பரங்குன்றத் தில் நிகழ்ந்ததாம்.

எலி அரசாய் மாறியது:— "ஒருநாள் திருவண்ணாமலையில் சுவாமி சந்நிதானத்தில் எரிந்து கொண்டிருந்த தீபம், வர வர மங்கி அணைந்து போகும் தறுவாயில் இருந்தது. இச் சமயம், ஓர் எலி, நெய் குடிக்கும் நிமித்தம் அவ்விளக்குத் திரியை நக்கவே, அத்திரி நீண்டு கொடுத்தது. அத னால் தீபம் அணையாது முன்னிலும் ஜொலித்தது. இப் புண்ணியச் செயலை வியந்து, சிவபிரான் அதனை மூவுலகம் ஆளும் மாபலி சக்ரவர்த்தியாகும் நல்வர மளித்தனர்" என்பதே.

பன்னும் உழவாரப் பணியும் புரிந்ததென்னோ
மன்னுதமிழ் நாவரையர்? வள்ளுவரே! — உன்னுங்கால்

ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல். (

(அ-ம் முதலியன):—பன்னும்-சொல்லப்படுகிற, உழவாரப்பணி-,, செதுக்கும் வேலை, புரி-செய், நாவலரையர்-திருநாவுக்கரசுநாயனர், ஒலும்-(தத்தமக்கு) இயன்ற, ஓவாதே-ஒழியாமல், செல்லும்வாய்-(மனம் வாக்கு காயம் என்னும் செல்லக்கூடிய வழிகளால், செயல்-செய்க.

நாவலரையர் உழவாரப்பணி புரிந்தது:—தம் தெய்வ வாக்கால் பல அற்புதங்கள் நிகழ்த்திக்காட்டிய பின், திருநாவுக்கரசு ஸ்வாமிகள், திருப்புகலூர் என்ற திவ்ய க்ஷேத்திரத்தில் உழவாரத் தொண்டு செய்த விஷயமே இங்குக் குறிக்கப்பட்டதாகும். இத்தொண்டு புரிகையிற்றான், அவர், தம்மை மயக்கவந்த வானவர் மங்கையரை மதியாது நின்றதும், சோதனையாக எதிரிற் காணப்பட்ட பொன்னையும் மணியையும், மண்ணையும் கற்களையும் போல் நினைந்து எறிந்து, "எண்ணுகேன் என்சொல்லி எண்ணுகேனோ' என்னும் பதிகம் பாடிச் சிவபெருமான் திருவடி நீழலுற்றதும்.

காலால் மிதித்தாலும் கண்ணப்பர் செய்பூசை
வாலிதெனச் சொல்வதென்னே வள்ளுவரே!—சாலும்
8

18 வள்ளுவர் நேரிசை.

மனத்துக்கண் மாசிலன் ஆதல்; அனைத்(து) அறன்.
ஆகுல நீர பிற. (௪)

(அ-ம் முதலியன):—வாலிது-தூயது, சாலும்-சிறந்ததாகும், மாசு-(தீயன சிந்திக்கும்)குற்றம், இலன் ஆதல்-இல்லாதவனாகுக, அனைத்து-அவ்வளவே, அறன்-அறமாவது, பிற-அஃதொழிந்த சொல்லும் வேடமும், ஆகுலநீர-ஆடம்பர குணமுடையன ஆகும் (தருமமே ஆகா.)

**கண்ணப்பர் பூஜைத் திறன்:—** உடுப்பூரிலிருந்த வேடனாகிய நாகனது மகனான திண்ணனார் என்பவர், ஒரு நாள் தம் குலத்தொழிற்கிணங்க வேட்டையாடச் சென்றிருக்கையில், கானகத்தில் குடுமித் தேவரைத் தரிசிக்க நேர்ந்தது. உடனே அவர்க்குச் சிவபக்தி மிகுந்தது. தம்முடன் வேட்டையாட வந்தவர்களுடன் வீடு திரும்பாமல் அங்கேயே தங்கி, தாம் தினமும் வதைத்த பிராணிகளின் மாமிசத்தை அச்சிவபிரானுக்கு ஊட்டி வந்தனர். அன்றியும், துஷ்டப்பிராணி எதுவும் குடுமித்தேவரை இமிசியாமல், இரவும் பகலும் ஆயுதபாணியாக நின்று காவல் புரிந்து வந்தனர். அங்கு சுற்றிலும் இறைந்திருந்த எலும்பு முதலியவற்றை ஒரு நாள் கண்டு கோபித்த சிவகோசரியாரை நோக்கிச் சிவபெருமான், "மறுதினம் என் பின்புறம் மறைந்திருந்து, நடக்கும் விந்தையைப்பார்" எனக் கட்டளையிட்டனர். அவரும் அங்ஙனமிருக்க, அத்தினம் சிவபெருமான் தமது கண்ணிற் புண்ணீர் சொரிவதாகத் திண்ணனாருக்குக் காட்டினர். திண்ணனார் திடுக்கிட்டுப் பல்வகைப் பச்சிலைகளைக் கொணர்ந்து, சாறு பிழிந்து கண்ணில் வார்த்தும், பயன்படாமற் போகவே, "ஊனுக்கு ஊன்" என்பது ஞாபகத்துக்கு வந்தது. வரவும், தமது ஒருகண்ணைப் பிடுங்கி, ஊறுற்ற கண்இருந்த இடத்திற் பதித்தனர். அது சரியாயிருந்தது கண்டு மகிழ்ந்தனர். உடனே சிவனது மற்றொரு கண்ணும் புண்ணுற்றது போல் இவர்க்குத் தோன்றவே, மிகக் கவலை அடைந்தனர். ஆயினும், கைகண்ட முறை "கண்ணுக்குக் கண்ணே" என்று கண்டறிந்தவராதலின், மனங்கூசாமலும், மகிழ்வுடனும், தமது மற்றொரு கண்ணையும் பிடுங்கிப் பதிக்கத் தீர்மானித்தனர். ஆயினும் அதனைப் பிடுங்கிவிட்டால் தக்க இடமறிந்து பதித்தல் முடியாதென்று, செருப்பணிந்த தமது காலைப், பெருமானது கண்ணருகில் வைத்து, மற்றைக் கண்ணை அம்புகொண்டு பிடுங்க யத்தனிக்கையில், சிவபெருமான் அவரது பக்திக்கு மெச்சித் தம் திருக்கையால் அவரது கையைப் பற்றி "நில்லு கண்ணப்ப" என்று தடுத்து, முத்தியளித்தனர். இவரது பக்தியைக் கண்ட சிவகோசரியார் வெட்கி நல்வழிப் பட்டனர்.

வேள்வியற மேபுரிந்தும் விண்பரவு தக்கற்கு
மாள்வினையா யிற்றென்றே வள்ளுவரே!—மீளா
அழுக்கா றவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்ற தறம். (௬)

(அ-ம் முதலியன):— வேள்வி-யாகம், விண்-தேவலோகத்திலுள்ளோர், பரவும்-வணங்கும்; தக்கற்கு-தக்ஷனுக்கு, மாள்வினை-சாவிற்குக் காரணமாகிய தொழில், அழுக்காறு - பொறாமை, அவா-பேராசை, வெகுளி-கோபம், இன்னாச்சொல்-துன்பந்தரும் கடும் சொல், இழுக்கா இயன்றது-(முற்கூறிய நான்கு நிலைகளையும்) கடிந்து இடையறாது நடத்துவது.

தக்கன் வேள்வியறம் புரிந்து, அது, அவனுக்கு மாள்வினையாய் நேர்ந்தவிவரம், "வள்ளுவர் நேரிசை, முதலாவது அதிகாரம், இரண்டாவது செய்யுளை" விளக்கக் கூறிய கதை கொண்டு அறிக.

பார்த்தனம்பால் வீழ்பொழுதும் பார்அளந்தா னுக்குநெய்த்தோர்
வார்த்தளித்தான் கன்னனறம் வள்ளுவரே!—வாய்த்தக்கால்
அன்(று) அறிவாம் என்னு(து) அறஞ்செய்க மற்(று) அது
பொன்றுங்கால் பொன்றாத் துணை. (௭)

(அ-ம் முதலியன):— பார்த்தன் - பிருதை (குந்தி)யின் புத்திரன்: அர்ச்சுனன், நெய்த்தோர் - இரத்தம், அறம் - புண்ணியம், கன்னன்-கர்னன், வாய்த்தக்கால் - சமயம் வாய்த்த பொழுது, அன்று - (இறக்கும் பொழுது) பிற்காலத்தில், அறிவோம்- செய்வோம், என்னது - என்று எண்ணாமல், செய்க - தினந்தோறும் செய்க, அது-அங்ஙனம் செய்த அறம், பொன்றுங்கால்-(சரீரம்) அழியும் பொழுது, பொன்றா-அழியாத.

கர்னன் பாரளந்தோனுக்குப்புண்ணியம் கொடுத்தது:—இடையெழு வள்ளல்களில் ஒருவனும் குந்தியின் விவாஹ காலத்துக்கு முன் அவளு

க்கு, சூரியனது அநுக்ரஹத்தால் பிறந்தவனுமான இவன், துர்யோதனனது தோழமை பெற்று அங்க தேசாதி பதியுமானவன். வள்ளன்மையிற் சிறந்த இவனது புண்ணியபலத்தால், அதி வீரனான இவன் துணை நின்ற துரியோதனனுதியர்க்கு ஜயம் கிடைத்து வந்தது கண்டு, கிருஷ்ணன் துரியோதனனுக்கு அபஜயம் உண்டாக்கக் கருதியும், கன்னனைப் பெருமைப் படுத்தஎண்ணியும், அந்தண வடிவங்கொண்டு, அவனது புண்ணியத்தை, அவன் பார்த்தன் அம்பால் அடிபட்டுக் குற்றுயிராய்க் கிடக்கும் சமயத்தில் சென்று யாசித்தான். யாசிக்கவே, தன்னிடத்தில் அச் சமயத்தில்



உள்ளதைக் கேட்டதற்காக கன்னன் மகிழ்ந்து, தன் உடலில் தைத்த அம்பைப் பிடுங்கி, அப்பொழுது வெளிப்பட்ட ரத்தத்தையே, நீராகக் கொண்டு கிருஷ்ணனுக்குத் தாரை வார்த்து,புண்ணியத்தை அளித்தான்.

> இல்லம் பொருள்ஈவால், ஏனைஅறம் துன்புறலால்
> வல்ல எனிற்பயனென்? வள்ளுவரே!—சொல்லால்
> அறத்தா றிதுவென வேண்டா; சிவிகை
> பொறுத்தானே ஊர்ந்தா னிடை (எ)

(அ-ம் முதலியன):— இல்லம்—இல்லறம், ஈவால்—ஈதலால், ஏனை அறம்—மற்ற அறம்: துறவறம், துன்புறலால்—சரீரத்தை வருத்தித் தவ ஒழுக்கத்தில் நிற்றலால், வல்ல—வலிமையொடு சிறந்தவை; அறத்து ஆறு—தருமத்தின் பயன், சிவிகை—பல்லக்கு, பொறுத்தான்—சுமப்பவன், ஊர்ந்தான்—சவாரி செய்பவன், இடை—இடத்திற் (கண்டறிக.)

"தருமத்தின் பயன் இது வென்று நூல் முதலியன கொண்டு அறிவிக்க வேண்டியதில்லை.பல்லக்குச சுமப்போனையும் ஏறுவோனையும் கண்டு நேரில் தெளிக'' என்பதே குறளின் கருத்து.

இல்லற வாழ்க்கைக்குமேன்மை விருந்தோம்பல் முதலியன. துறவறத்திற்கு மேன்மை தவம். இவ்விரு ஆசிரமத்தாரும், தத்தமக்குரிய அறத்

புதவரூது கைக் கொண்டொழுகி வந்தவர்களாதலின் பல்லக் கேறும் கியம் பெற்றூர்கள். இவ்வறத் தினின்றும் வழுவியோர் பல்லக்குப் ாகிக ளாயினர் என்பது விளக்கம்.

> பார்க்கண் பிறவார் பதினு றகவையொடு
> மார்க்கண்டர் வாழ்வதென்னே? வன்ருவரே!—நோக்கியே
> வீழ்நாள் படாஅமை நன்ருற்றின் அஃதொருவன்
> வாழ்நாள் வழிஅடைக்கும் கல். (அ)

(அ-ம் முதலியன):—பார்க்கண்-பூமியில், பிறவார்-பிறவாதவராகி, அகவை-வயது, வீழ்நாள்-நன்மை எதும்செய்யாது வீணிற் கழித்தநாள்; படாமை – உண்டாகாமல், நன்று – புண்ணியச செய்கை, ஆற்று-செய், அஃது-அச்செயல், வாழ்நாள் வழி – இனிப்பிறந்து வாழும் காலினது வழியை.

மார்க்கண்டர் 16 வயதுடன் வாழ்ந்தது:—மிருகண்டு என்ற முனிவர்க்கு மார்க்கண்டேயர் என்ற ஒருமகன் உண்டு. இவர்க்கு 16 வயதே ஆதிவிற் கொடுபட்டிருந்தது. அஃதுணர்ந்து மிக வருந்திய தம் பெற்றோரது



வருத்தம் நீங்குமாறு இச் சிறுவர் சிவஸ்தலங்கள் தோறும் சென்று அர்ச்சனை செய்து வந்தனர். திருக்கடவூரில் இவர் சிவார்ச்சனை செய்து கொண்டிருந்த போது, இவரது முடிவுகாள் வந்து விட்டதை புணர்ந்த யமன், இவரது ஆவியைக் கவர்ந்து வரும்படி தனது தூதரை அனுப்ப, அவர்களால் முடியாமற் போகவே, தானே சென்றான். மார்க்கண்டேயர் அவனைக் கண்டதும் அஞ்சிச் சிவலிங்கத்தை இறுகத் தழுவிக் கொள்ளவே, யமன் வெகுண்டு, பாசக்கயிற்றை அவர் மீது வீசி, சிவலிங்கத்துடன் அவரைச் சேர்த்து இழுத்தான். உடனே அவ் விலிங்கத்தினின்றும் சிவன் வெளிவந்து யமனை உதைத்து வீழ்த்தி, இவர்க்கு "என்றும்" பதினாறு வயதருளினர். இதுவே இவர் சிரஞ்சீவியான விவரம்.

காடுசென்றும் இன்புற்றார் கௌந்தேயர்; கௌரவரோ
வாடினார் நாடுகொண்டும்; வள்ளுவரே!—நாடின்
அறத்தான் வருவதே இன்பம்.மற் றெல்லாம்
புறத்த; புகழும் இல. (கூ)

(அ-ம் முதலியன):— கௌந்தேயர்-குந்தி மக்கள்: பாண்டவர், புறத்த-இன்பத்திற்குப் புறம்பான துன்பத்துட் சேர்வனவாகும்; புகழும்இல-கீர்த்தியும் உடையன ஆகா.

பாண்டவர் இன்புற்றதும், கௌரவர் வாடியதும்:— கௌரவர்கள் தமது சிறிய தந்தையின் மக்களான பாண்டவர்பாற் பொறாமை கொண்டு அவர்களை நயவஞ்சகமாக வரவழைத்து, மாயச் சூதாடி, சகுனியின் கபடத்தால் வென்று, அவர்கட்குரிய ராஜ்யத்தைக் கைப்பற்றினர். அத்துடனும் நில்லாது 'பெண்ணீர்மை குன்றாப்பெருந் திரு'வாகிய துரௌபதியை மான பங்கம் செய்ய முயன்றும், அவள், தனது கற்பு வலியாலும், ஈசுவர பக்தியாலும், அவ் விடையூறினின்றும் தப்பி, மறு சூதாடிப் பாண்டவர்கள் பறிகொடுத்த யாவையும் மீண்டும் திருப்பிக் கொண்டாள். ஆயினும் துரியோதனனாதியர், பாண்டவர்களுக்குரிய தாயபாகத்தை அப்பொழுதும் அளிக்காமல், 'அவர்கள் 12 வருடம் வனவாசமும், ஒருவருஷம் அக்ஞாத வாசமும் செய்து திரும்பினால் தான், அவர்களுக்கு நாடு கொடுபடும்' என்றனர். அவர்கள் இப் பதின் மூன்று வருஷத்தையும் ஒரு குறைவு மின்றி இனிது முடித்த விஷயம் யாவரும் அறிவர். 'ஸ்ரீ ராமன் போன இடம் எல்லாம் திரு அயோத்தி'என்பதற் கேற்ப, பாண்டவர் சென்ற இடமெல்லாம் மகாத்மாக்களும் சென்றனர். அவர்களுக்குத் துரௌபதியின் கற்பு வலியால் அக்ஷய பாத்திரம் முதலியன கிடைத்தன. சுருங்கச் சொல்லின் அவர்கள் காட்டிலிருந்த போதிலும், நாட்டிலிருந்ததைவிட அதிக மன



அமைதியும் மகிழ்ச்சியும்கொண்டு இன்புற்றிருந்தனர். துர்யோதனாதியரோ பொறாமைப் பேய் பிடித்தோர்களாதலின், "அழுக்கா றுடையார்க்கு அது

சாலும் ஒன்னார் வழுக்கியும் கேடு ஈன்பது'' என்பதற் கேற்ப, அவர்களது அசோக சிந்தையும் சூழ்ச்சியுமே அவர்களை வாட்டி வருத்தின. சித்திர சேனனால் அவர்களுற்ற அவமானமும், தாம் ஏவிய காளமாமுனியே தான் தோற்றுவித்த பூதத்திற் கிரையானதும், துர்வாச மாமுனியை வேண்டித் தாம் பாண்டவர் பால் அனுப்பிய எண்ணம் பலியாமற் போனதுமே அவர்களை வாட்டி வருத்தப் போதியவை யன்றோ?

'என்தலைநீ கொள்க' எனக்குமணன் வாள்கொடுத்தும்
வன்தலைகொள் ளார்சாத்தர் வள்ளுவரே! —என்றும்
செயற் பால(து) ஒரும் அறனே. ஒருவற்(கு)
உயற் பால(து) ஒரும் பழி. (ம)

(அ–ம் முதலியன்.):— வன்தலை – வலியதலை, சாத்தர்–பெருந்தலைச் சாத்தனார், செயற்பாலது–செய்யத்தக்கது, அறன்–புண்ணியம், உயற்பாலது–ஒழிக்கத் தக்கது, பழி–தீவினையே, 'ஒரும்' இரண்டும் அசை.

குமணன் தன்தலையைக் கொள்ளச் சாத்தர்க்கு வாள் கொடுத்தது:— தொண்டை நாட்டு முதிரமலைக்குச் சிற்றரசனும் முதல் எழுவள்ளல்களில் ஒருவனும், தமிழ்க் கவிஞரைப் பரிபாலித்து வந்தவனுமாகிய இவன், தனது தம்பியான இளங் குமணனது வஞ்சனையால் வனமுற்றவன். காட்டுக்குக் குமணனை ஓட்டியதோடு திருப்தியுறாமல், அவனது தலை கொணர்வோர்க்குக் கோடிப்பவுன் தருவதாக இளங் குமணன் அறிவித்து மிருந்தான். இச்சமயம் பெருந் தலைச் சாத்தனார் என்னும் புலவர் தமது வறுமைப் பிணிக்கு வருந்திக் காடு சென்று, அங்கிருந்த குமணனிடம் தமக்குள்ள குறைகளைக் கூறிக் கண்ணீர் விட, அவ் வள்ளல் மன மிரங்கி 'அந்த நாள் வந்திலை அருங்கவிப் புலவோய்! இந்த நாள் வந்து நீ நொந்தனை அடைந்தாய்' என்று வருந்திப் பின்பு அவரை நோக்கி, "ஒரு காரியம் செய்: இக்கணமே நீ என்

"தலைதனைக் கொடுபோய் என்தற் றம்பிகைக் கொடுப்பா யாயின்
விலையெனச் செம்பொன் கோடி மிகமகிழ்ந் தீவான் கோடி.
ஈதுநீ செய்யின் கின்னை இன்னல்செய் கலியும் வீயும்,

ஒதிய எம்பி உள்ளத் தோங்கிய கவலும் நீங்கும்,
மேதகு புகழும் மேலாம் வீடும்எற் செய்தும் கண்டாய்.
ஆதலால் இதனின் மேலாம் அறமும் ஒன்றில்லை'' யென்ன



உரைத்துக் கைவளிக்து சென்னி தாழ்ந்தான். ஆயினும் புலவர் அதனை மறுத்து, ஓர்புக்தியால் அவனை உடன்படுத்தித் தாமும் பழிக்குள்ளாகாது அவனும் உயிர் துறவாது தப்பினர். குமண வள்ளலது அதி அற்புத சரித்திரத்தையும், புலவரது பெருந்தன்மையையும் அறிய வேண்டுவோர் ஸ்ரீமு.ரா.கந்தசாமிக் கவிராயர் இயற்றியுள்ள 'குமணசரித்திரம், பெற்றுப் படித்து மகிழ்க.

---

ஐந்தாவது அதிகாரம்

---

## இல் வாழ்க்கை.



இன்னுயிரே அன்ன இராமனைக் கோசிகன்பால்
மன்னன் விடுத்ததென்னோ? வள்ளுவரே!— உன்னுங்கால்
இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்ஆற்றின் நின்ற துணை. (க)

(அ-ம் முதலியன்):–இன்உயிர்–இனியஉயிர், அன்ன–போன்ற, கோசிகன்-விசுவாமித்திரன், மன்னன்–தசரதன், உன்னுங்கால்–எண்ணுமிடத்து, இல்வாழ்வான்–இல்லறத்தான், இயல்புடைய-(துறவறத்)தன்மை யுடைய, மூவர்–பிரமசாரி, வானப்பிரஸ்தன் சந்யாசிஆகிய மூவர்கள், நல்லாறு–அவரது நல்ஒழுக்க வழிகளில்.

இராமனைக் கோசிகன் பால்மன்னன் விடுத்தது:— சுகேதனன் என்னும் யக்ஷனது மகளும், ஆயிரம் யானைப் பலமுடையாளுமான தாடகை,

அகஸ்தியர் சாபத்தால் அரக்கியானவள், நல்லோர்க்குப் பலவிதத்திலும் தீமை புரிந்து வந்த இவள், விசுவாமித்திர முனிவனது வேள்விக்கு இடையூறு செய்யவே, அம்முனிவன் தசரத சக்ரவர்த்தியிடம் சென்று, தாடகையால் தானடைந்த கஷ்ட நிஷ்டூரங்களைக்கூறி, அவளை வதைக்க ஸ்ரீ ராமனைத் தன்னுடன் அனுப்புமாறு வேண்டினன். அப்பொழுது தசரதன் புத்திரவாஞ்சையால் முதலில் மறுத்தும், வசிட்டரது ஆக்ஞையாலும் உறுதி மொழியாலும் மனம் தேறி ஸ்ரீராமனை அனுப்பினன்'' என்ற இராமாயணக் கதைப் பகுதியே இங்குக் குறித்ததாகும்.

> கன்னிபங்கன் செய்தான் களத்தவிந்த வல்லாள
> மன்னற்கீ மக்கடன்முன் வள்ளுவரே!— என்னே?
> துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
> இல்வாழ்வான் என்பான் துணை. (உ)

## 24. வள்ளுவர் நேரிசை.

(அ-ம் முதலியன):— கன்னிபங்கன்-உமாதேவியை இடப்பாகத்தில் வைத்தவன்: பரமசிவன். களத்து அவிந்த- யுத்தகளத்தில் இறந்த; ஈமக் கடன்-பிரேத சடங்கு, துறந்தார்-கைவிடப் பட்டோர், துவ்வாதவர்-வறிஞர். இறந்தார்-அநாதைப் பிரேதங்கள்.

வல்லாள மன்னனுக்குப் பரமன் ஈமக்கடன் செய்தது:—திருவண்ணாமலையை ஆண்ட வல்லாள மகாராஜனுக்கு இருமனைவியருண்டு. ஆயினும் அவன் புத்திரப்பேறின்றி வருந்தினன். வேண்டியோர் வேண்டியாங்கு ஈயும் இவனிடம், சிவபெருமான் விடபுருஷ சந்யாசி வேடம் தரித்து வந்து, தாம் இன்புற ஒரு ஸ்திரீ தரவேண்டுமென யாசித்தனர். அரசன் அதற்கிணங்கி அதி சௌந்திரியமுள்ள ஓர் வேசியை அவர்க்குத் தேடித் தரும்படி தனது ஆட்களுக்குக் கட்டளை யிட்டான். அவ்வாட்கள் பல விடம் சென்றும், 'வேசையர் யாவரும் ஆங்காங்கு, ஒவ்வொரு தவசிக்கு ஒவ்வொருவராக நியமனமாய் இருந்த விஷயம்' அறிந்து, விசனித்துத் தாம் சென்ற விஷயம் வீணாயினமையை அரசனிடம் அறிவித்

னர். அரசன் வருந்தி, எங்ஙனமேனும் பெரியோரைத் திருப்திப் படுத்த நினைந்து தன் மனைவியருள் ஒருத்தியை அவர்பாற் போக்கினன். உள்ளே சென்றவள், வீடபுருஷன் உறங்கிக் கொண்டிருக்கவும், சிறிது நேரத்திற் கெல்லாம் அவன் திடீரென ஒரு இளங்குழந்தையாக மாறி அழவும் கண்டாள். உடனே அவளுக்குப் பால் சுரந்தது. அதைக் கொடுத்து அவள் குழந்தையை மகிழ்வித்தாள். சின்னாட்களுக் கெல்லாம் யுத்தகளத்தில் வல்லாளன் இறக்க, சிவபெருமானே அவனுக்கு மைந்தனாய் ஈமக்கடன் முடித்து, அவனுக்கும் அவன் மனைவிக்கும் முத்தியளித்தனர். இவ்வல்லாளன் திருவண்ணாமலை யரசன் என்பதும், சிவ கைங்கரியத்திற் சிறந்தவன் என்பதும், சமீபத்தில் திருவண்ணாமலையில் அகப்பட்ட பல பொருள்களில் அவன்பெயர் வெட்டப்பட்டிருந்ததைக் கொண்டே அறியலாகும்.

ஆறில் ஒருபங்(கு) அரசன் பெறுக என
மாறிலார் சொற்ற தென்கொல்? வள்ளுவரே!—கூறுங்கால்
தென்புலத்தார், தெய்வம், விருந்(து),ஒக்கல், தான்,என்(று)ஆங்(கு)
ஐம்புலத்(து) ஆ(று) ஓம்பல் தலை. (௩)

(அ-ம் முதலியன):—மாறு இல்லார்-குற்றமற்ற பெரியோர், சொற்றது-சொன்னது, தென்புலத்தார்-பிதிர்த் தேவதைகள், விருந்து-புதிதாக வந்தோர்: அதிதிகள், ஒக்கல்-சுற்றத்தார், தான்-இல்லறத்தானாகிய தான், ஐம்புலத்து-ஐந்திடத்தும் செய்யப்படுகிற, ஆறு-அறவழியை, ஓம்பல்-தவறாது செய்தல், தலை-சிறந்த அறம்.

## இல் வாழ்க்கை. 25

பாண்டுவழி நிற்பப் பரந்தமுன் னோன்வழிகள்
மாண்டொழிந்த தென்கொலோ? வள்ளுவரே!—யாண்டும்
பழிஅஞ்சிப் பாத்(து)ஊண் உடைத்தாயின் வாழ்க்கை
வழிஎஞ்சல் எஞ்ஞான்றும் இல். (௪)

(அ-ம் முதலியன):— வழி - வம்சம், பரந்த - தொகை மிக்க, முன்னோன்-திருதராஷ்டிரன், என்கொலோ?-ஏனோ? யாண்டும் - எப்பொழு

தும், பழி—பாவத்துக்கு, பாத்து—முதற் செய்யுளிற் கூறிய 'இயல்புடைய' மூவர், இரண்டாவது செய்யுளிற் கூறிய மூவர், மூன்றாவது செய்யுளிற் கூறிய முதல் நால்வர் ஆகிய பதின்மர் விஷயமாகவும் பங்கிட்டு, ஊண்—உண்ணுதலே, உடைத்தாயின்—உடையதானால், வழி—சந்ததி, எஞ்சல்—குறைதல், எஞ்ஞான்றும்—எப்பொழுதும்; இல்—இல்லை.

*பாலர்க்கே போதா உணவும் பகுத்துண்டார்*
*மாலில் குசேலரன்பால் வள்ளுவரே!— சீலமென்னே?*
*அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை*
*பண்பும் பயனும் அது.* (ரு)

(அ-ம் முதலியன):—பாலர்— குழந்தைகள் பதத்து—பங்கிட்டு, மால் இல்—மயக்கம் நீங்கிய சீலம்—தருமம், அன்பு—மனையாளிடத்தன்பு, அறன்—பிறர்க்குச் செய்யும் அறம், பண்பு—கடமை, பயன்—பிரயோசனம்.

வறுமைப்பிணியால் வருந்திய குசேலன் தனது 27 மக்களையும் மனைவியையும் காக்க வகையின்றித் தவித்த போதும் தனக்குக் கிடைத்த அற்ப வுணவைத் தனது மனைவிமக்களுக் கீந்து அதிதிகட்கும் இட்டுத் திருப்தியுடன் வாழ்ந்த விஷயமே இங்குக் குறிக்கப்பட்டது.

*முன்னி வனம்புகுதார் முதறிவி னோர்மிதிலை*
*மன்னன் முதலோர்தாம் வள்ளுவரே!—என்னே?*
*அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்*
*போஒய்ப் பெறுவ(து) எவன்?* (சு)

(அ-ம் முதலியன):— முன்னி – ஆராய்ந்து, புகுதார் – புகவில்லை, மிதிலைமன்னன் – மிதிலாபுரி யரசன்: ஜனகன், அறத்து ஆற்றின்—தர்ம வழியில், ஆற்றின்—செய்தால், புறத்து ஆற்றில்—(இல்வாழ்க்கைக்குப்) புறம்பான வன வாழ்க்கையில்: துறவற வாழ்க்கையில்; போஒய் – போய், எவன்?— யாது?

ஜனக மகாராஜனது வரலாறு:—மிதிலை மன்னரில் ஒருவனாகிய இவன், ஹ்ரஸ்வரோமன் புத்திரன். இல்லறத்திருந்தும் இதயம் அடக்கிய வல்லவனாகிய ஓர் மகாயோகி.

தனது அரண்மனை ஒருகால் தீப்பற்றி எரிய, ஒருசிறிதும் கவலைப் படாமல், அவ்வரண்மனைப் புறத்தே, உலரவைத்த தன் கௌபீனத்திற் காக ஓடிய சுகமுனிவரை 'நல்லதுறவு' என்று பரிகஸித்தோன் இவனே.

சந்திரசே னன்தவத்தாற் செய்யா தனசெய்தான்
மைந்துடன்இல் வாழ்தருமன் வள்ளுவரே!—முந்தும்
இயல்பினுல் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல் வாருள் எல்லாம் தலை (எ)

(அ-ம் முதலியன):—செய்யாதன-செய்ய முடியாதவற்றை; மைந் துடன்-வலிமையோடு, இல்- வீடு, முந்தும்-சிறந்த, இயல்பினுன்-உரிய இயற்கைப்படி, முயல்வார்- (ஐம்புலன்களையும் அடக்க) முயற்சி செய் வோர், தலை-மேலானவன்.

சந்திரசேனன் தவத்தாலும் செய்ய முடியாததைத் தருமன் செய் தது:— சந்திரசேனன் என்பான் விபுலனது மகன். தருமன் என்பான் சுபுத்தன் என்பவனது மகன். (குந்தீ மகன் அல்லன்) இவர்களுள் தரு மன் இல்லறத் திருந்தவன். சந்திரசேனன் துறவியானவன். சந்திரசே னன் துறவியான விஷயத்தைக் கேள்வியுற்ற தருமன், தானும் துறவு கொள்ள இருக்கையில், பிருகு முனிவர் எதிர்ப்பட்டுப் பஞ்சாட்சர மகி மையை உபதேசித்து இல்லறப் பெருமையை எடுத்துரைத்து அவ்வறத்தி லேயே அவனிருக்குமாறு செய்து திரும்பினர். நிற்க.

சந்திரசேனன் பின்பு சித்திகளில் வல்லவனுகித் தருமனிடம் வந்து தன் வலிமையைக் காட்டி இந்திரனை வரவழைத்தான். தருமன் பஞ்சாக்ஷர வலிமையால் பிரமனையே அழைத்து அவனுக்குக் காட்டினன். சந்திரசேனன் வெட்கித் தருமனையே குருவாகக் கொண்டு உபதேசம் பெற்றான்.

கன்னன் உயிர்காக்கும் கவசமும்ஈந் தான்;வசிட்டன்
மன்இரந்தும் தந்திலனல் வள்ளுவரே!— உன்னுங்கால்
ஆற்றின் ஒழுக்கி அறன்இழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து. (அ)

## இல் வாழ்க்கை. 27

(அ-ம் முதலியன):—மன்-அரசன், இர-யாசி, உன்னுங்கால்-ஆராயுமிடத்து, ஆற்றின்-(தமது) வழியில், ஒழுக்கி-(தவம் செய்வோரையும்) நடத்தி, அறன்-(தானும்தன்) தருமத்தினின்றும், இழுக்கா-தவறாத, நோற்பாரின்-தவம் செய்வோரின் நிலையினும், நோன்மை - பெருமை, உடைத்து-உடையது.

கன்னன் உயிர் காக்கும் கவசம் ஈந்தது:—துர்யோதனனது தோழமைபெற்று அங்கதேசாதிபதியான, வள்ளன்மையிற் சிறந்த இவனை, இந்திரன், கிருஷ்ணனது கட்டளைப்படி, தன் மகனுன அர்ச்சுனனது க்ஷேமத்தைக் கருதி யாசிக்க, அவன் தனது உயிர் காக்கும் கவசத்தையும் இந்திரனுக்கு ஈந்தமையே இங்குக் குறிக்கப் பட்டதாகும்.

மன்னவன் இரந்தும் வசிட்டன் மறுத்தமை:—தபோமகிமையிற் சிறந்த விசுவாமித்திரன், ஒரு கால் அரசனுக இருந்து உலகம் ஆண்டவன். ஒருநாள் அவன் காட்டிற்கு வேட்டையாடச் சென்றான். வேட்டை முடிந்ததும், களைத்துப்போய், சிரம பரிகாரத்தின் பொருட்டு வசிஷ்ட

முனிவனது ஆசிரமத்திற்குத் தன் பரிவாரங்களுடன் சென்றான். தனது இருக்கை புற்ற அம்மன்னனுக்கு வசிஷ்டன் அதிதிபூஜை செய்து, தன்னிடத்திருந்த காம தேனுவைக் கொண்டு, வந்தோர் அனைவர்க்கும் விருந்தளித்தான். அப்பசுவின் தெய்வத்தன்மையை நோக்கி வியந்து மகிழ்ந்த விசுவாமித்திரன், அதனை (பலர்க்கு உதவியாகும்படி)த் தனக்கு உதவுமாறு வசிஷ்டனை இரந்தனன். ஆயினும் வசிஷ்டன் அதற்கு இணங்காமல் சாதுரியமாக "அரசரிடத்திருந்து அந்தணர் பெறலாகுமேயன்றி அந்தணரிடமிருந்து அரசர் பெறலாகாது" என்று கூறிப் பசுவைத் தர மறுத்தான்.

காமநுகர் இல்லறமோ, காட்டில்உறும் அவ்வறமோ
வாய்மையின்ஆய் வார்க்(கு) உயர்வு? வள்ளுவரே!—தோம்இல்
அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை; அஃதும்
பிறன்பழிப்ப தில்ஆயின் நன்று (கூ)

(அ-ம் முதலியன்):— காமம் - இன்பம், நுகர் - அனுபவி, அவ்வறம் - துறவறம், வாய்மையின் - உண்மையாக, ஆய்வோர்க்கு - ஆராய்ந்து பார்ப்போர்க்கு, தோம்இல் - குற்றம் இல்லாத, அஃதும்- துறவறமும், பிறன் பழிப்பது இல்ஆயின் - பிறனால் பழிக்கத் தக்கக் கூடா வொழுக்கத்தோடு கூடியிராவிட்டால், நன்று - (இல்வாழ்க்கையைப்போல்) நன்றே ஆகும்.

## 28 வள்ளுவர் நேரிசை.

கண்ணன்இரா மன்முதலாம் காவலரைத் தெய்வம்என
மண்ணுளோர் எண்ணுவதென்? வள்ளுவரே!—எண்ணுங்கால்
வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும்
தெய்வத்துள் வைக்கப் படும் (ய)
(அ-ம் முதலியன):— கண்ணன்-கிருஷ்ணன், காவலர்-அரசர், வை

யம்-உலகம், வாழ்வு ஆங்கு-இல்லறத்தோடு கூடி வாழும் இயல்பினால், வான்உறையும்-விண்ணுலகிலுள்ள, தெய்வத்துள் வைக்கப்படும்-தேவருள் ஒருவனாக வைத்து மதிக்கப்படுவான்.

---

## ஆறாவது அதிகாரம்

---

## வாழ்க்கைத் துணை நலம்.

---

*நாடிழந்துங் கூலிகொண்டு நல்ல புரூரவன்இல்*
*வாடாது வாழ்ந்தனளே வள்ளுவரே!— நாடின்*
*மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்*
*வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.* (க)

(அ-ம் முதலியன):—மனைத்தக்க-இல்லறத்துக்குத் தக்க, மாண்பு-நற்குண நற்செய்கைகள், தன்கொண்டான்-தன்னை நாயகனாகக் கொண்டவனது, வளம் தக்காள் வாழ்க்கை-வரவுக்குத் தகுந்த வாழ்க்கையை உடையவள், துணை-இல்லற வாழ்க்கைக்குத் துணையாவள்.

புரூரவன் இல் கூலி கொண்டும் வாடாது வாழ்ந்தது:—பிரதிஷ்டான புரத்தரசனாகிய புரூரவன் என்பவனுக்கு ஜயப்பிரதை என்றோர் நற்குணம் நிறைந்த கற்புடைய மனைவி உண்டு. கலிபுருஷனது மாயையால், அவன் கனவைப் போல், தன, கனக, வஸ்து, வாகன, நாடு, நகரம் முதலியவற்றின் நீங்கித் தன் மனைவி மக்களுடன் காடுபுக்குக் கஷ்டமுறநேர்ந்தது. பசியால் களைத்துப் பயணத்தால் இளைத்து வருந்திய இவர்களுக்கு ஆநந்தன் என்பவனது பேருதவி கிடைத்தது. பிறகு இவ் ஆனந்தன் முதலியோரிடம் புரூரவன் கணக்குப் பிள்ளையாக அமர்ந்தான். ஜயப்பிரதையும் கூலிக்கு வேலை செய்ய லாயினள். ஆனந்தன் கீழ்ப் புரூரவனிருந்து பொறுமையுடன் வேலைபார்த்துவந்த பொழுது, சோமபுரி

யில் உள்ள நவகோடி நாராயண செட்டியென்பானது ஆதரவையும் புரூரவன் பெற சேர்ந்தது. ஓர்நாள், ஜயப்பிரதையின் அழகைக் கண்டு மயங்கிய செட்டி, அவளை நயவஞ்சகமாக ஓர் தனியிடம் வரச் செய்து தனது தீய எண்ணத்தை நிறைவேற்ற எண்ணினான். இஃதறிந்த அவ்வுத்தமி, அவ்வுள்ளிருந்த ஓர் மரப் பேழையிற் புகுந்து "நான் உத்தமியாயின் என் கணவனைக்காணும் வரைப் பசியற்றிருப்பேனாக. என் கணவன் திறந்தால் அல்லாமல் பிறர் எவர்க்கும் இப்பெட்டி திறவாதிருப்பதாக. ஜலத்தாலாயினும் நெருப்பாலாயினும் மற்றெதனாலாயினும் இதற்கு அழிவுறாதிருக்க." என்று கூறி அதனை அடைத்துக்கொண்டு, அவ்வாறே அதிற் பலகால மிருந்தனள். பிறகு தனது நாயகனது திருக்கை பட்ட மாத்திரத்தில், அவள் பெட்டியினின்றும் வெளிவந்தனள். இவளுடைய முழுவரலாறும் அறியவிரும்புவோர், "புரூரவ சக்ரவர்த்தி கதை" என்பதை வாசித்து அறிக.

வானோர் குரவனுமுன் வாழ்க்கைசிதை வுற்றுநொந்தான்
மானேர் விழிமனையால் வள்ளுவரே!—ஆனு
மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல். (உ)

(அ-ம் முதலியன):— வானோர்குரவன்-தேவகுரு: பிரகஸ்பதி, மான்நேர்-மானினது விழியொத்த, மனை-மனைவி: தாரை, ஆனு-நீங்காத, மனைமாட்சி-இல்லறத்திற்குரிய நற்குண நற்செய்கைகள், இல்லாள்கண்-மனைவியிடம், வாழ்க்கை-அவ் இல்வாழ்க்கை, எனை-எவ்வளவு, மாட்சித்து - பெருமையையுடையது, இல்- (பெருமை ஏதும்) இல்லாததே ஆகும்.

வானோர் குரவன் வாழ்க்கை சிதை வுற்றது:—சந்திரன், பிரகஸ்பதியிடம் வித்யாப்பியாசம் செய்கையில், அவனது பத்தினியாகிய தாரையென்பவளுடன் வெகு அந்யோந்யமாகச் சில காலம் வாழ்ந்து பிறகு

அவளை அபகரித்துக் கொண்டே போய் விட்டான். பெண்டாட்டியைப் பறிகொடுத்த பிரகஸ்பதி, இந்திரனைத் துணையாகக் கொண்டு சந்திரனொடு கடும்போர் புரிந்தும் அவளை மீண்டும் பெற முடியவில்லை. கடைசியில் பிரமன் சந்திரனுக்கு நல்லவார்த்தை சொல்லித் தாரையை விட்டு விடச் செய்தான். இத்தாரைக்கும் சந்திரனுக்கும் பிறந்தவனே சந்திர வம்சத்திற்குத் தலைவனாகிய புதன்.

நெய்தும் இனிதுற்றீர் நீயிர். யயாதிவெள்ளி
வைதசா பம் பெற்றான் வள்ளுவரே!—வையத்துள்
30 வள்ளுவர் நேரிசை.

இல்லதென் இல்லவள் மாண்பானல்? உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை? (௩)

(அ-ம் முதலியன):—நெய்தும்-நெய்யும் தொழில் செய்து வந்தும், இனிது உற்றீர்-மேன்மை அடைந்தீர், நீயிர்-நீர், வெள்ளி-சுக்கிரன், இல்லதுஎன்?-இல்லாத பொருள் எது?, இல்லவள்-மனையாள், மாண்பானல்-நற்குணநற்செய்கை யுள்ளவளாயின், மாணாக்கடை-நற்குணம் நற்செய்கை யில்லாதவளா யிருந்தால்.

திருவள்ளுவர் ஏலேல சிங்கனைப் போன்ற லக்ஷாதிபதிகளை மாணாக்கராகப் பெற்றும், வறுமையைப் பெருமையா வலியவே கொண்டு, செய் தொழில் அனைத்தினும் நெய்தொழில் தீதில தென்று அத்தொழிலைக் கையாடி, உத்தமியாகிய வாசுகியுடன் இல்லறம் நடத்தி வந்த விஷயமே அவரைப் பற்றி இங்குக் குறித்ததாகும்.

யயாதி வெள்ளி வைத சாபம் பெற்றது:—நகுஷனது குமாரர்களில் ஒருவனான யயாதிக்குத் தெய்வயானை, சன்மிஷ்டை என இரு மனைவியர் உண்டு. தெய்வயானை சுக்கிராசாரியன் மகள். சன்மிஷ்டை விடபவன்மா என்பவனது மகள். இவர்கள் இருவரையும் மணமுடிப்பதன் முன் சன்மிஷ்டை தெய்வயானைக்கு இழைத்த ஓர் தீங்கினிமித்தம், சுக்கிராசாரி

யயாதியை நோக்கி, "சன்மிஷ்டையைத் தெய்வயானையைப் போலவே எல்லா சுகங்களையும் நீ பெறச் செயலாம். ஆயினும், சயனவிஷயத்தில் மட்டும் அவளை விலக்கி வைக்க வேண்டியது" என்று கண்டிப்பாகக் கட்டளை யிட்டிருந்தனன். இதற்கிணங்கியே யயாதி அவளை மணந்தும், ஒருநாள், சன்மிஷ்டை அவனை மயக்கிச் சேர்ந்து பூரு என்பவனைப் பெற்றனள். இஃது அறிந்த சுக்கிராசாரி, தன்னை அவமதித்ததன் நிமித்தம் வெகுண்டு, யயாதியை நோக்கி, "உன் யௌவன கர்வமே இதற்குக் காரணம் ஆதலின் நீ விருத்தன் ஆகுக" எனச் சபித்தனன். இதுவே அவன் சாபம் பெற்றதன் காரணமாகும்.

[இச்சாபம் பெற்றபின் அவன் வருந்தியதையும் தெய்வ யானைக்கும் இதனால் கேடுண்டாவதையும் உணர்ந்து சுக்கிரன்,யயாதிக்கு இரங்கி "நின் புதல்வருள் ஒருவனுக்கு உன் கிழத்தனம் ஈந்து அவனது இளமையைப் பெறுக. இங்ஙனம் இளமையைத்தர இயைந்தவனுக்கு உன் அரசை யளிப்பாயாக" என்றான். தெய்வயானையின் மக்கள் இளமையை மாற்றிக் கொள்ள விரும்பவில்லை. சன்மிஷ்டை மகன் பூரு மனமகிழ்ந்து உடன் பட்டான். யயாதி மகிழ்ந்து அவனது இளமையைப் பெற்றுப் பிறகு பூருவுக்கே அரசளித்தான்.]

### வாழ்க்கைத் துணை நலம். 31

ஆதப் புலைச்சியென அன்றறிந்தும் நம்தாயை
மாதவத்தோன் கொண்டதென் சொல்? வள்ளுவரே!— ஈதடுக்கும்
பெண்ணிற் பெருந்தக்க யாவுள, கற்பென்னும்
திண்மைஉண் டாகப் பெறின்? (௪)

(அ-ம் முதலியன்):—மாதவத்தோன் – யாளிதத்தன், ஈது அடுக்கும்– இது பொருந்தும், பெண்ணின்–மனையாளினும்,பெருந்தக்க–உயர்வாகிய பொருள், திண்மை–உறுதி.

ஆதிப்புலைச்சி யென்று அன்றறிந்தும் மாதவத்தோன் அவளை மணந்தது:—பெருஞ்சாகரனது புதல்வனுகிய பகவன் என்னும் ஓர் அந்தணோத்தமன், காசி யாத்திரையின் பொருட்டுப் புறப்பட்டுச் செல்

கையில், மேலூர் அகரத்தில் தங்க நேர்ந்தது. அவ்விடம் ஓர் பெண்வர அவன் புலைச்சியாக இருந்தமை கண்டு சட்டுவத்தால் தலையில் அடித்துத் தூரத்திப் பிறகு தன் வழியே சென்றான். காசியிலிருந்து சிலவருஷங் களுக்குப்பின் அவன் திரும்பியபோது இதே சத்திரத்தில் பகவன் தங்கி னன். அப்பொழுது ஒருபெண்ணைக் கண்டு மயல் கொண்டு, அவளை வளர்த்தவளிடம் சென்று அவளைத் தனக்கு மணம் செய்விக்கும்படி வேண்டினன். அவர்களும் மணஞ்செய்து கொடுக்க இயைந்தனர். கங்கா ஸ்நானத்தின் பொருட்டு அவள் மயிரை வகிர்ந்த காலத்தில், பகவன், அவள் தலையில் ஒருவடுக்கண்டு "இவள் ஆதியானவளே (முன்னையவளே) எங்ஙனமெனில் நாம் சில வருடங்களுக்கு முன்பு சட்டுவத்தால் அடித்த வடு இது. ஆதலால் அறியாமற் புலைச்சியை மணக்க இசைந்தது தவறு" என அங்கிருந்து எடுத்தனன் ஓட்டம். உத்தமியாகிய அப்புலைச்சியும் அவனையே மணப்பதாக உறுதி செய்து கொண்டு அவன் செல்லுமிடந்தோறும் அவனைப்பின் தொடர்ந்து சென்றாள். அவளுடைய மனஉறுதியை வியந்து பகவன், சில நிபந்தனைகள் எற்படுத்தி அவளை மணஞ்செய்து கொண்டனன். இதுவே உறையூர்ப் பெரும்பறையன் வீட்டிலும் பிறகு நீதிஜயன் வீட்டிலும் வளர்ந்த ஆதியைப் பகவன் மனைவியாகக் கொண்டகதை. யாளிதத்தன் என்பவன் இப்புலைச்சியை மணந்ததாக ஞானாமிர்தத்தால் தெரிய வருகிறது. பகவன் என்பது யாளிதத்தனது மறுபெயர் போலும்.

> முன்னரன நூயைமழை மூவர் தடுப்பவும்நா
> வன்மையாற் பெய்வித்தாள் வள்ளுவரே!—உன்னியே
> தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யும் மழை (ரு)



(அ-ம் முதலியன்):—மூவர்-சிவன் விஷ்ணு பிரமன், நாவன்மை-சொல் வலிமை, உன்னி-நினைந்து, தெய்வம்-பிறதெய்வத்தை, தொழா அள்-வணங்காளாகி, கொழுநன்-கணவனை,

அததுயை மூவர் தடுப்பவும் மழைபெய்வித்தது:—தன்னைச்சோதிக்க

வந்த திரிமூர்த்திகளையும் தனது கற்புவலியால் சின்னஞ் சிறு குழந்தை களாக்கிய இவ்வுத்தமி, ஐம்பத்து நான்கு வருஷம் மழையின்றிப் பிராணி கள் வருந்தியகாலையில், தனது புருஷனுன அத்திரியின் ஆக்ஞையினால் கங்கை கொண்டுவந்தது மின்றி, அம்மூவர் தடுக்கவும், மகிதலம் முழு தும் மழைவளம் பெறச் செய்தனள் என்ற விஷயமே இங்குக் குறித்த தாகும்.

அங்கத் துடன்சோ(று) அருந்தியநா ளாயணிதன்
மங்கலநா ளும்காத்தாள் வள்ளுவரே!— மங்காது
தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண் (சு)

(அ–ம் முதலியன்):— அங்கத்துடன்–(தன் கணவனும், தொழுநோயி னனுமான மௌத்கல்ய ரிஷியின்) ஊனும் தர்ரேும் சேரும்படி; அருந் திய–உண்ட, மங்காது– கெடாமல், தன்காத்து–கற்பினின்று வழுவாமல் தன்னைக் காத்துக் கொண்டு, தன்கொண்டான்–தன்னைக் கணவனுகக் கொண்டவனையும்: பேணி–(உண்டி முதலியவற்றால் உரிய காலங்களில்) உபசரித்து; தகைசான்ற–தம் இருவரிடத்தும் நன்மை அமைந்த, சொல்– புகழை, காத்து–(நீங்காமல்) காப்பாற்றி; சோர்வு (முற்கூறிய நற்குணநற் செய்கைகளில் இம்மியும்) தளர்ச்சி, இலாள்–இல்லாதவளே, பெண்–மனை வியாவள்.

நாளாயணி தன் மங்கலநாளை காத்தது:—நளாயணன் என்ற ஓர் இருடியின் புத்திரியும் இந்திரசேனை என்ற இயற் பெயருடையவளுமான நாளாயணி என்பவள் கற்பினுக்கு அணிகலமாகக் கவின் பெற வாழ்ந்த வள். இவ்வுத்தமி கையுங்காலும் தேகமும் அழுகிச் சொட்டும் குஷ்டரோகி யான மௌத்கல்யன் என்பானுக்கு மனைவியாயினள்.(மௌத்கல்யன்தன் மனைவியைப் பரிசோதிக்கவே குஷ்டரோகிபோற் காட்டிக் கொண்டனன் என்கின்றனர் சிலர். கர்மவசத்தால் அவன் குஷ்டரோகியாகவே இருந் தான் என்கின்றனர் வேறுசிலர்.) உண்மை எதுவாயினும் ஆகுக. அவன் அவனது குஷ்டத்தின் நிமித்தம் அற்பமும் அவனிடம் அருவருப்புக் கொள்ளாமல், அதி அன்புடன் தனது நாயகனுக்குரிய பணிவிடைகளைக் குறைவறப் புரிந்து வந்தாள். இவ்வளவு அழுகுள்ளநாயகனை ஓர் கூடை

யில் வைத்து அவன் மனம் திருப்தியுறுமாறு தினந்தோறும் கணிகை



யரில்லிற்குக் கொண்டு போய் விட்டுத் தன் நாயகனது மகிழ்ச்சியைத் தனது மகிழ்ச்சி யாகப் பாவித்து வந்தனன் என்றால் அவளது பதிவிரதம் எத்தன்மையது பாருங்கள்!. ஒருநாள் அவள் தன் நாயகனைத் தூக்கிக் கொண்டு வேசி வீடு செல்லும் போது, ஏக இருட்டாயிருந்ததால், அந்த மாகத் இருட்டுக் குற்றம் சாட்டப்பெற்றுக் கழுவேற்றப்பட்டிருந்த மாண் டவியர் சிரமிசை அவன் கூடையை மோதிக் கொண்டு சொல்ல, ஏற் கனவே துடிதுடித்துக் கொண்டிருந்த அம்முனிவர் சினந்து, "சூர்யோ தயத்திற்குள் மாங்கல்யம் இழப்பாய்" எனச் சபித்தனர். இதுகேட்ட அவ்வுத்தமி சிறிதும் மனந்தளராது, "பொழுதே விடியாதிருக்கக் கட வது" எனச்சொல்லிச் சென்றனள். அவளது ஆக்ஞைப்படி பொழுது விடியாமலே போயிற்று. போகவே, யாவரும் வருந்தி, நாளாயணியை வேண்ட, அவள் "மாண்டவ்யர் தம் சாபத்தை மாற்றினால், யான் என் வார்த்தையை மீட்டுக்கொள்ளுகிறேன்"என, தேவர் முதலிய யாவரும் நாளாயணியின் தூய்மையைக் கூறி வேண்டினர். உடனே அவர் இரங்கி "தீர்க்க சுமங்கலி பவா" என்று அவளை ஆசீர்வதித்துத் தம் சாபத்தை மாற்றலும், நாளாயணியும் பொழுது புலருமாறு கூறினள். யாவரும் மகிழ் ந்தனர். நாளாயணி சுமங்கலியாக வாழ்ந்தாள்" என்பதே.

> மேன்மாடம் விட்டு வெளிச்சென் றிரவிலொரு
> மான்மாய ஔவை கண்டாள் வள்ளுவரே!—ஊன்மேற்
> சிறைகாக்கும் காப்(பு) எவன் செய்யும்? மகளிர்
> நிறைகாக்கும் காப்பே தலை. (எ)

(அ-ம் முதலியன):—மான்-மான் போன்ற பெண்ஒருத்தி, ஊன்-சரீ ரம், சிறை-கட்டுக் காவலினால், காப்பு-காவல், எவன்-என்ன பயனை, நிறை-கற்பு, காக்கும்-(பெண்கள் தமமைத்தாமே) காத்துக் கொள்ளும்

தலை—முதன்மையான காவலாகும்.

மேன்மாடம் விட்டு வெளிச் சென்று இரவில் ஒருமான் மாய்ந்தது:— அளகாபுரி அரசனது மகள் ஏலங்குழலாள், 12 வயதுக்குள்ளேயே நானு வித்தையும் கற்றவள். தனது அழகுக்கும் கல்விக்கும் தக்க நாயகனைத் தெரிந்து, விவாசம் செய்யுமாறு, புஷ்பவதியானதும் 12 நிலை உப்பரிகையில் பாதுகாப்புடன் அவள் வைக்கப்பட்டாள். ஒருநாள் பாடலீபுர ராஜனது புத்திரன், சந்தனகுமாரன், எழுத்து வாசனை யற்றவன், அளகாபுரி வந்து சேர்ந்தான். அவன் அவ்வூரை சுற்றிப்பார்க்கையில், பூர்ண சந்திரன் உதய மானாற் போல் இருந்த ஏலங்குழலாளை உன்னத உப்பரிகைமீது கண்டான். அவளும் இவ் விராஜகுமாரனைக் கண்டாள். கண்ட

5



தும் இருவர்க்கும் காதல் ஏற்பட்டது. ஆயினும் அவர்கள் பேச முடியாத நிலையிலிருந்த படியால் அக்கன்னி தன் காதோலையை வாங்கி விரல் நகத்தால் அதில் ராஜகுமாரன் ஊருக்கு மேற்றிசையிலுள்ள சாவடியில் இரவில் வந்து தங்கியிருக்கும் படிக்கும், தான் அங்கு வருவதாகவும் எழுதி அதனை அவன் முன் னெறிந்தாள். அவன் அதை யெடுத்துத் தனக்குப் படிப்பில்லை யாதலால் தன் னெதிரில் வந்த குஷ்டரோகி ஒருவனிடம் கொடுத்துப் படிக்கச் சொன்னான். குஷ்டரோகி ராஜகுமாரியைத் தான் அனுபவிக்கக் கருதி, "இவ்வூரரசன் உம்மைப் பிடித்துக் கொல்லுமாறு கட்டளையிட்டிருக்கிறாராம். அவரது ஆட்கள் உம்மைத் தேடுகிறார்களாம். ராஜகுமாரத்தி நீர் உயிர்தப்பி ஓடவேண்டு மென்று எழுதியிருக்கிறாள்." என்னலும், சந்தனகுமாரன் பயந்து ஓடிப் போனான். பிறகு அக்குஷ்டரோகி தன்னை அலங்கரித்துக் கொண்டு, குறித்த விடஞ் சென்று, ராஜகுமாரிக்காகக் காத்திருந்து அவளைத் தீண்டியதும், அவள், தீண்டியவன் ராஜகுமாரன் அல்லனெனக் கண்டு, நிகழ்ந்த மோசத்தை யூகித்தறிந்து, ஏங்கிச் சீவனை விட்டாள்" என்பதே.

ஈண்டும் விசும்பும் இசைபாடக் கண்ணகிதான்

மாண்டவற்பெற் றும்பருற்றாள் வள்ளுவரே!—மாண்டவத்தாற்
பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு. (அ)

(அ-ம் முதலியன):— ஈண்டு - இவ்வுலகம், விசும்பு-தேவலோகம், இசை-கீர்த்தி, மாண்டவன்-இறந்த தன் கணவனாகிய கோவலனை, உம்பர்- விண்ணுலகு, மாண்தவத்தால்-சிறந்த தவத்தால், பெற்றான்-கொண்ட கணவனை, பெறின்-(பூசிக்கப்)பெற்றால், பெண்டிர்-மனைவியர், புத்தேளிர்-தேவர்.

கண்ணகி மாண்ட தன் கணவனைப் பெற்று உம்பர் உற்றது:—'கற்பின் தெய்வம்' என்றும், 'திருமாபத்தினி' யென்றும் 'பத்தினிக்கடவுள்' என்றும் இவைபோற் பிற மொழிகளாலும் சிறப்பித்துக் கூறப்படும் இப் பெண், காவிரிப்பூம் பட்டினத்துக் கோவலன் என்னும் வணிகனது மனைவி. இக் கோவலன் தன்னிடத்தில் அன்புமிக்க காமக்கிழத்தியாகிய மாதவிக்குத் தன் செல்வம் முழுவதையும் கொடுத்து வறியனாயினன். மானமிழந்து மதிகெட்ட இவன் உள்ளூரில் வசிக்க மனமின்றி, தன்மனைவியுடன் புறப்பட்டு வியாபார நிமித்தம் மதுராபுரி வந்து சேர்ந்தான். தன் மனைவியை ஓர் உத்தமியினிடத்தில் ஒப்புவித்து விட்டு, அவளது காற்சிலம் பொன்றை விற்கச் சென்றனன். இச்சிலம்பைப் பாண்டியன் மனைவி



யினது சிலம்பைக் களவாடிய பொற்கொல்லன் ஒருவன் கண்டு, உருவத்தில் இச்சிலம்பு அதற்கு ஒத்திருப்பதை நோக்கி மகிழ்ந்து, தன் மீது நின்ற பழி நீங்குமாறு, உடனே பாண்டியனிடம் சென்று அவன் புத்தியை மயக்கிக் கோவலனே திருடன் என அவனை நம்பும்படி செய்து, அவனைக் கொல்வித்தனன். இச்செய்தி கேட்ட கண்ணகி அரசன் பாற் சென்று, தன் வரலாறு கூறி, தனது மற்றொரு சிலம்பைக் கொண்டு, கோவலன் முற்றிலும் நிரபராதி என்பதை மெய்ப்பித்து, சோகாக்கினி

யால் மதுரையை அழித்து 15 நாளில், தன் நாயகனே தன்னை எதிர் வந்தழைக்க அவனுடன் உம்பருலகு குற்றனள் என்ற சிலப்பதிகாரக் கதையால் தெரிகின்றது.

> விக்கிரமார்க்கற்குமுன்னோன் வேத்தியல்விட் டானில்லாள்
> வக்கிரமார்க் கந்தன்னால் வள்ளுவரே!—தக்க
> புகழ்புரிந்(த) இல்இல்லோர்க்(கு) இல்லை இகழ்வார்முன்
> ஏறுபோற் பீடு நடை. (கூ)

(அ-ம் முதலியன):— விக்கிரமார்க்கற்கு முன்னோன் – விக்கிரமாதித்தனது தமையன்: பர்த்ருஹரி, வேத்தியல்–அரசாளும் தன்மை, வக்கிரமார்க்கம்–தீநெறி, புரிந்த–விரும்பிய; இல்–மனைவி, ஏறு–ஆண் சிங்கம், பீடு–கம்பீரமான: பெருமிதமான.

விக்கிரமார்க்கன் முன்னோன் இல்லாளின் வக்கிர மார்க்கத்தால் அரசாட்சியில் வெறுப்புற்றது:—உஜ்ஜயினி நகரத்தை அரசாண்டவனும், ஸம்ஸ்கிருத மகா கவியும், சுபாஷிதரத்னவளி முதலியவற்றின் ஆசிரியனுமான பர்த்ருஹரி என்னும் பக்தியிற் சிறந்த அரசனுக்கு,வைதிக பிராமணனொருவன், தனக்கு புவனேச்வரியால் அளிக்கப்பட்ட தெய்வீகக் கனியொன்றைத் தந்தருளினன். அதனை உண்போர் நரை திரை மூப்பு சாக்காடின்றிநெடுநாள் வாழ்வராம். பர்த்ருஹரி அக் கனியை மகிழ்வுடன் பெற்றுத் தன் காதலிக்கு அளிப்ப, அவள் தனக்குப் பிரியமான குதிரைக்காரனுக்குக் கொடுத்தாள். அவன் அதை ஒருதாசிக்கும், அத்தாசி தன் இஷ்டனை ஒரு இடையனுக்கும், அவ்விடையன் தனது வைப்பாட்டியான சாணமெடுத்துப் பிழைக்கும் ஒருத்திக்கும் கொடுத்தனர். இக்கனியின் பெருமையை அறியாது சாணமெடுப்பவள் அதனைச் சாணத்தின் மேல் வைத்து, அரசனது அரண்மனைப் பக்கம் வர, பர்த்ருஹரி–உல்லாசமாய் உலாவ வந்தவன்– இதனைக் கண்டு, மனைவிக் களித்த மகிமை மிக்க இக் கனி மாட்டுச்சாணம் எடுப்பவள் கையில் எங்ஙனம் கிடைத்தது என்பதை அறிய அவளை விசாரித்தான். உள்ளது உள்ளபடியே விஷயம் வெளிவந்ததும், பர்த்ருஹரி,

"பெண்கள் அகக் காதலெல்லாம் பேசுமுயற் கொம்பே
பெருக்கபடம் இடுகலனே பிறங்கும் அவர் உடலம்"
எனத் தேர்ந்து ஸம்ஸார விரக்தனுகித் தவநெறியிற் புகுந்தான்.

அங்கயற்கண் மாதால் அரனும்,எழில் உக்கிரனும்
மங்கையும்,மேன்மையுற்றார் வள்ளுவரே!—மங்காத
மங்கலம் என்ப மனைமாட்சி மற்(று) அதன்
நன்கலம் நன்மக்கட் பேறு. (ம)

(அ—ம் முதலியன):— அங்கயற்கண்மாது — மீனுக்ஷி தேவி, அரன்—சோமசுந்தரக்கடவுள், எழில்—அழகு, உக்கிரன்—உக்கிரபாண்டியன், மங்கை—மீனுக்ஷி, மங்கலம்—நன்மை, மனைமாட்சி—மனைவியின் நற்குண நற்செய்கைகள், அதன்—அம்மனைமாட்சியின், நன்கலம்—சிறந்த ஆபரணம், பேறு—பெறுதல்.

---

## ஏழாவது அதிகாரம்.

---

# மக்கட் பேறு.



நுந்தையாம் யாளிதத்தர் நோன்பென்னே? நம்முதலாம்
மைந்தரெழு வர்ப்பெற்றார் வள்ளுவரே!—முந்தப்
பெறுமவற்றுள் யாம்அறிவ தில்லை. அறிவறிந்த
மக்கட்பே(று) அல்ல பிற (க)

(அ—ம் முதலியன):—நுந்தை—உமது தந்தை, நோன்பு—விரதம்: பாக்

யம், மைந்தர்எழுவர்—திருவள்ளுவர் இடைக்காடர் கபிலர் என்ற சகோதரர் மூவரும், ஔவை உப்பை உறுவை வள்ளி என்ற சகோதரிகள் நால்வரும், முந்த—சிறப்பாக, அறிவது—மதிப்பது, அறிவு அறிந்த—அறிய வேண்டிய விஷயங்களை அறியவல்ல.

"வள்ளுவர் நேரிசை"யில், "வாழ்க்கைத் துணைநலம்" என்ற அதிகாரத்தில் கூறியுள்ள ௫-வது செய்யுளிற் சொல்லியபடி, பெருஞ் சாகரனது புதல்வனும் யாளிதத்தன் என்ற இயற் பெயருடையவனுமான பக



வன் என்னும் அந்தணன், ஆதி யென்னும் ஆத(—அறிவில்லா)ப் புலைச்சியை மணந்து முற்கூறிய மக்கள் எழுவரையும் பெற்றதே இங்குக் குறித்ததாகும்.

> நிரயம் நீங்கிச் சிறந்தார் இறந்தாரும்
> வானிற் பகீரதனால் வள்ளுவரே!—ஏனோ?
> எழுபிறப்பும் தியவை தீண்டா, பழிபிறங்காப்
> பண்புடை மக்கட் பெறின். (௨)

(அ—ம் முதலியன) :— நிரயம்—கொடிய நரகம், வானில்—சுவர்க்கத்தில், இறந்தார்—கபில முனிவரது சாபத்தால் இறந்த சாகரர், பழிபிறங்கா—பிறரால்பழிக்கப்படாத, பண்பு—நற்குணம்.

பகீரதனால் இறந்தார் நிரயம் நீங்கிச் சிறந்தது:—இந்திரப்பட்டம் விரும்பி, ஸகரன் என்னும் சக்ரவர்த்தி 99 அசுவமேதம் செய்து, நூறுவதும் செய்யத் தொடங்குகையில், தன் பதவியை இழத்தற்கஞ்சிப் பொறாமை யுற்ற இந்திரன், அவன் யாகம் செய்ய இருக்கும் குதிரையைக் கவர்ந்து, பாதலத்தில் தவம் செய்து கொண்டிருந்த கபில முனிவரது ஆச்ரமத்திற் கட்டிச் சென்றான். குதிரையைத்தேடி வருமாறு ஸகரனது மக்கள் 60000 பேர்களும் அனுப்பப்பட்டனர். அவர்கள் உலகெங்கும் தேடியும் அதனைக் காணாமையின், பூமியைத் தோண்டிச் சென்று, பாத

லம் புகுந்து, குதிரையைக் கபிலரது முன்னிலையிற் கண்டனர். ஊழ்வினைப்பயனால் அவர்கள் கபிலரே அதனைக் களவாடியதாக எண்ணி, அவரை வைது துன்புறுத்தினர். உடனே அவர் சினந்து, அனைவரையும் நீருக்கினர். இவ்வனம் நரகவேதனை யுற்ற 60,000 பேர்களுக்கும் நற்கதி யடைவிக்குமாறு தேவலோகத்திலிருந்த கங்கையைக் கொண்டு வரவேண்டி, ஸகரனது பேரனான அம்சுமானும், அவன்மகன் திலீபனும் தத்தம் வாழ்நாள் எல்லாம் முயன்றும் முடியாமற் போயிற்று. பிறகு திலீபனது மகனான பகீரதன் பல்லாயிரம் ஆண்டு தவமியற்றிக் கங்கையைத் தரிசித்து அதனை உடன்படுத்திக் அதன்வேகத்தைத் தாங்குமாறு சிவபெருமானை வேண்ட அவரும் அதற்கிணங்கினர். பிறகு பகீரதனுக்கு அளித்த வாக்குப் பிரகாரம் கங்கை (ஆத்திரத்துடன்) இழிய, சிவபெருமானைக் கண்டவுடன் தன் வேகமுற்றிலும் ஒடுங்கிப் பசும் புற்றரையில் விழுந்த பனித்துளி அளவாகி அவரது சடையில் அடங்கியது. அங்கிருந்து அது சிறிது பூமியில் இழிந்து பகீரதன் சென்ற இடங்களில் எல்லாம் சென்று, பாதலத்திலிருந்த அவனது முன்னோரது எலும்புகளை நனைத்தது. இறந்தோர் இதனால் நற்கதி யுற்றனர்'' என்பதே.

## 38 வள்ளுவர் நேரிசை.

மேனாள் அறன்மகன்செய் வேள்வியால் உள்மகிழ்ந்தான்
வானு டுறுபாண்டு வள்ளுவரே!—ஆனாத
தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தம்தம் வினையால் வரும். (௩)

(அ-ம் முதலியன):—மேல் நாள்-முன்னொரு காலத்தில், அறன் மகன்-தர்மபுத்திரன், வேள்வி-யாகம், வான் நாடு உறு-விண்ணுலகுசேர்ந்த, ஆனாத-நீங்காத, தம்மக்கள்-தம் மக்களை, அவர்பொருள்-அப்புதல்வர் சம்பாதித்த பொருள்கள், தம்தம்வினையால்-தம்மைக் குறித்து அவர் செய்யும் நல்வினையினாலே; வரும்-தம்மிடத்து உண்டாகும்.

அறன் மகன் வேள்வியால் பாண்டு மகிழ்ந்தது:—பாண்டவர்கள் மயனால் நிருமிக்கப்பட்ட இந்திரப் பிரஸ்தத்தில் இருக்கையில், திரிலோக சஞ்சாரியாகிய நாரதரிடம் தர்மபுத்திரர் ஒருநாள் சம்பாஷிக்க நேர்ந்தது. அப்பொழுது ஹரிச்சந்திரன் ராஜசூய யாகம் செய்தமையால் இந்திர லோகத்திலும், பாண்டு அதுசெய்யாமையால் யமலோகத்திலும் இருக்கும் விஷயம் நாரதர் தர்மபுத்திரனுக்கு அறிவித்து, "உன் தந்தை, உடனே உன்னை ராஜசூயயாகம் நடத்தித் தன்னை இந்திரலோகத்தில் இருத்துமாறு சொல்லினர்" என்னச் சொல்லிப் போயினர். தருமபுத்திரர் அவ்வாறு யாகம் செய்து தந்தையை மகிழ்வித்தார்" என்பதே.

செய்ய குசேலருந்தம் சேய்களொடு புன்கூழை
வையத் துவந்துண்டார் வள்ளுவரே!—துய்ய
அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ் (௬)

(அ-ம் முதலியன):—செய்ய-சீலம் மிக்க, குசேலர்-குற்சிதமான (அருவருக்கத்தக்க) ஆடையையுடைய 'சுதாமா' என்ற இயற்பெயருடையவர்; சேய்-குழந்தை, புல்-அற்ப, வையத்து-உலகில், உவந்து-மகிழ்ந்து, துய்ய-பரிசுத்தமான, ஆற்ற-மிகவும், அளாவிய-அளைந்த, கூழ்-அற்ப உணவு.

வறுமைப் பிணியால் வருந்திய குசேலர், பிரதிதினமும் நீவாரப்புல் தானியத்தைச் சிரமப்பட்டுச் சேகரித்துத் தம் மனைவி கைக் கொடுத்து அவளைக்கொண்டு அதைக் குத்துவித்து, அதனாலாகிய கூழைத் தம் 27 மக்கட்கு யிட்டு அவர்கள் அளாவிய கூழைக்குடித்து இன்புற்ற விஷயமே இங்குக் குறித்ததாகும்.

தன்னைப் பழித்து(ம்) மக்கள் தம்மைக்கண் டின்புற்றான்
மன்னுநளன் அட்டிற்கண் வள்ளுவரே!—உன்னியக்கால்
மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம்; மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு. (௫)

(அ-ம் முதலியன):— அட்டில்கண்- மடைப்பள்ளியில், உன்னியக்கால்-எண்ணுங்காலையில், தீண்டல்—ஸ்பரிசித்தல்.

தன்னைப்பழித்தும், தன்மக்களைக் கண்டு நளன் இன்புற்றது:—கலி புருஷனது மாயையால் நாடு நகரங்களையும் மனைவிமக்களையும் துறந்த நளன், கார்க்கோடகனாற் கடியுண்டு, உருமாறி, ருதுபர்னனிடம் தேர்ப் பாகனாகவும் சமையற்காரனாகவும் வேலைக்கு அமர்ந்திருந்த காலையில், கற்பிற் சிறந்த தமயந்தியின் சூழ்ச்சியால் ருதுபர்னனுடன் அவளிருந்த குண்டினபுரம் செல்ல நேர்ந்தது. அப்பொழுது தமயந்தி அவனைப்பற்றிய உண்மையை அறியத் தன் மக்களை ஓர் தோழிவசம் அனுப்பி அவன் முன் நிறுத்தினள். அப்போது அந்த

மக்களைமுன் காணு மனம் நடுங்கா வெய்துயிராப்
புக்கெடுத்து வீரப் புயத்தணையா—"மக்காள்! நீர்
என்மக்கள் போல்கின்றீர், யார்மக்கள்?" என்றுரைத்தான்
வன்மக் களியானை மன்

ஆகிய நளச்சக்ரவர்த்தி. இது கேட்ட அம்மக்கள், நளனை நோக்கி,

"மன்னன் நிடதத்தார் வாழ்வேந்தன் மக்கள்யாம்.
அன்னைதனைக் கான்விட்(டு) அவன் ஏக—இந்நகரில்
வாழ்கின்றோம். எங்கள் வளநாடு மற்றொருவன்
ஆள்கின்றான்" என்றார் அழுது.

நளன், இது கேட்டுத் தன் மகனது மனக்கருத்தை அறிய எண்ணி,

"உங்கள் அர(சு)ஒருவன் ஆளநீர் ஓடிப்போந்(து)
இங்கண் உறைதல் இழுக்கன்றோ?—செங்கை
வளவரசே!" என்றுரைத்தான் மாதவத்தாற் பெற்ற
இளவரசை நோக்கி எடுத்து.

இம்மொழி கேட்ட அவன்மகன் இந்திரசேனன், சினந்து,

"நெஞ்சால்இம் மாற்றம் நினைந்துரைக்க நீயல்லா(து)
அஞ்சாரோ மன்னர்? அடுமடையா!—எஞ்சாது

## 40 வள்ளுவர் நேரிசை.

தீமையே கொண்ட சிறு தொழிலாய்! எம்கோமான்
வாய்மையே கண்டாய் வலி,
எந்தை கழலிணையில் எம்மருக்கும் காணலாம்
கந்து சுளியும் கடாக்களிற்றின்—வந்து
பணிமுடியிற் பார்காக்கும் பார்வேந்தர் தங்கள்
மணிமுடியில் தேய்ந்த வடு"

என்று கூறினன். நளன் தன்னைத் தன் மகன் இவ்வனம் பழித்துக் கூறியும் அதனைப் பாராட்டாது பெரு மகிழ்ச்சியே கொண்டவனாய் அவனை அன்பொடு தழுவி,

"மன்னர் பெருமை மடையர் அறிவரோ?
உன்னை அறியா(து) உரைசெய்த—என்னை
முனிந்தருளல்" என்று முடிசாய்த்து நின்றான்
கனிந்துருகி நீர்வாரக் கண்"

என்பதே இதிற் குறித்துள்ள விஷயமாகும்.

கல்லுமுருகுங்குழலிற் கண்ணன் மழலையே
வல்லதின்பம் நந்தர்க்கு வள்ளுவரே!—சொல்லிற்
குழலினிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச் சொற் கேளா தவர். (சு)

(அ-ம் முதலியன்):—வல்லது இன்பம்-இன்பம் தரவல்லது, நந்தன்-நந்த கோபன்: ஸ்ரீ கிருஷ்ணனது வளர்ப்புத் தந்தை, குழல் - புல்லாங்

குழலின் இசை, யாழ்—வீணையின் இசை.

தேவகிக்கும் வசுதேவர்க்கும் பிறக்கும் எட்டாவது குமாரனால் தனக்கு மாணம் என்பதை அறிந்த கம்ஸன், அவ்விருவரையும் காவலில் வைத்து, அவர்களுக்குப் பிள்ளைகள் பிறக்குந் தோறும் அக்குழந்தைகளைக் கொன்று வந்தான். ஆயினும் எட்டாவது குழந்தையாகத் தோன்றிய ஸ்ரீ கிருஷ்ணன் மட்டும், தனது விசித்திர சக்தியால் தப்பி, ஆயர் பாடியில் நந்தகோபன் என்னும் இடையன் வீட்டில் வளர லாயினன். குழலூதி ஆநிரை மேய்க்கும் அவ்விடையனுக்கு ஸ்ரீ கிருஷ்ணனது மழலைச் சொல் அக்குழலிசையினும் பரமாநந்தம் விளைத்தது என்பதையே ஆசிரியர் குறிக்கின்றார். வளர்ப்புத் தந்தைக்கே இவ்வளவு ஆநந்தமிருக்குமாயின், சொந்தப் பெற்றோர்க்கு எவ்வளவு ஆநந்தம் இயற்கையில் உண்டாகும் என்பதை ஊகித்து உணர்க.

## மக்கட்பேறு.

*எந்தைதொல் காப்பியனை என்றே சமதக்கி*
*வந்தமுனிபாற் கொடுத்தான் வள்ளுவரே—சிந்திப்பின்*
*தந்தை மகற்(கு) ஆற்றும் நன்றி அவையத்து*
*முந்தி இருப்பச் செயல்.* (எ)

(அ-ம் முதலியன்):—எந்தை-எங்கள் தந்தை (போல்பவனான), சமதக்கி-ஜமதக்கிமுனிவர், வந்தமுனி-தன்னிடம் வாத அகஸ்திய முனிவர், பால்-இடத்தில், கொடுத்தான்-ஒப்புவித்தான், மகற்கு-மகனுக்கு, ஆற்றும்-செய்கிற, நன்றி-நன்மை: உதவி, அவையத்து-கற்றோர் சபையில், முந்தி-அக்கற்றோரினும் மேம்பட்டு, இருப்பச் செயல்-இருக்கும்படி செய்தலாம்.

திரணதூமாக்கினி முனிவர் என்ற இயற்பெயர் வாய்ந்த தொல்காப்பி

யர், தமது தந்தையாகிய ஜமதக்நி முனிவரால் அகஸ்தியர்பால் தமிழ் கற்கு மாறு விரும்பி அனுப்பப் பட்டனர். இத் தொல்காப்பியர் அகஸ்திய முனிவர்பால் அருந்தமிழ அறிந்த மாணவர்கள் பன்னிருவரினும் முதல்வராயினர். இடைச்சங்கம் இவரையே தலைமையாகக் கொண்டு நிகழ்ந்தது. இவர் இயற்றியுள்ள தொல்காப்பியமே தற்காலத்துள்ள முதற் றமிழ் நூலும் தொன்மைப் பேரிலக்கணமும் ஆகும். இவர் தமது ஆசிரியராகிய அகஸ்தியரினும் கல்வி யறி வொழுக்கங்களில் தாழாது விளங்கியவர். இத் தொல்காப்பியரை உதாரணமாக எடுத்துக் கூறியதும், நமது ஆசிரியரின் தமிழபிமானத்தை நன்கு விளக்குகின்றது. ஆசிரியருக்குத் தொல்காப்பியரிடம் பெரும் பற்று உண்டென்பது அவரது 'தொல்காப்பியப் பாயிர விருத்தி' முதலியவற்றாலும் அறியலாகும்.

தன்னேர் வனசரன்சீர் தாங்காக் கிரீடி,தறகொல்
மன்னுசுதற் கண்டுவந்தான் வள்ளுவரே!—என்னேயோ?
தம்மில்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது- (அ)

(அ–ம் முதலியன):—தன்னேர்–தனக்குச சமானமாக வித்தையிற் சிறந்து விளங்கிய, வனசரன்–வேடன்; ஏகலைவன், சீர்தாங்கா–சிறப்பைக் கண்டு சகியாத, கிரீடி–இந்திரன் சூட்டிய கிரீடம் புனைந்தவன்; அர்ச்சுனன், தற்கோல்–தன்னையே கொன்ற, மன்னுசுதன் கண்டு – (வீரம்) பொருந்திய தன் குமாரனை 'பப்பிருவாகனனைக் கண்டு, உவந்தான்–மகிழ்ந்தான், தம்மில்–தம்மைக்காட்டிலும்,

6



தன்னேர் வனசரன் சீர் கிரீடி தாங்காமை:—செல்வம் மிக்க ஏகலைவன் என்ற வேடனொருவன், துரோணனிடம் சென்று, தனக்கு அஸ்திர சஸ்திர வித்தை பயிற்றுமாறு வேண்ட, துரோணன், சில காரணங்களால் முடியாதென்று விட்டான். ஆயினும் ஏகலைவன் மனந்தளராமல்

துரோணனது உருவொன்றை வைக்கோலாற் செய்து, அதைத் துரோணனாகப் பாவித்து அதன் முன்னிலையில் நின்று,பக்தி பூர்வமாகவே துரோணனுக்குத் தெரிந்த யாவையும் கற்றுவிட்டான். துரோணனுக்கும், அவனது ஆசாரியனுக்கும் அர்ச்சுனனுக்கு மட்டும் தெரிந்த ஓர் அரிய ரஹஸ்ய வித்தையையும் இவன் தன் பக்தி மிகுதியால் கற்றுவிட்டான். இவ்வித்தை முற்கூறிய மூவரைத் தவிர வேறெவர்க்கும் தெரியாதென்று துரோணன் தன் ஒரே பிரிய மாணாக்கனான அர்ச்சுனனுக்கு உறுதியாகச் சொல்லியிருந்தான். ஒருநாள் நாயொன்று துரோண உருவில் சிறுநீர் பெய்ய, ஏகலைவன் சினந்து அது தன் குருவுக்குச் செய்த அபசாரத்திற்காகத் தற்செயலாய்,முற்கூறிய ரகஸ்ய வித்தையால், ஓரம்பு அதன் மீது எய்தான். நாய் வீறிட்டுக் கதறிக்கொண்டு, சல்லடைக்கண் போல் பொத்த தன் சரீரத்தினின்றும் ரத்தம் சொட்டச் சொட்ட அதற்கு உடையோனான அர்ச்சுனனிடம் சென்றது. நாயைக் கண்டதும் அர்ச்சுனனுக்குக் கோபத்திலும் ஆச்சரியமே மேலிட்டது. 'துரோணர் கூறிய உறுதி மொழி சுத்தப் புரட்டு' என்று நிர்மானித்து, அவரை வரவழைத்து, நாயைக்காட்டி, "ஐய! 'நீர் மூவர்க்கே தெரியும்' " என்ற ரகஸ்ய வித்தை வேற்றான் ஒருவனுக்கும் தெரிய வந்திருக்கிறது என்பது இந்நாயின் கோர நிலையால் ஐயர் நிரிபறஅறியலாமல்லவா? இன்னும் யார்க்கோநீர் ஆசாரியராயிருந்து கற்றுக் கொடுத்துள்ள உண்மையை மறைத்தமைக்கு விசனப்படுகிறேன்" என்றான். துரோணர் திகைத்து, அவன் கூறியதை முற்றும் மறுத்தனர். பிறகு உண்மை யறியுமாறு இருவரும் நாய் அழைத்துச் சென்றவழி சென்றனர். ஏகலைவன் 'குருபக்தி'யாலேயே தன் போன்ற வீரனானமை யறிந்ததும், அர்ச்சுனன் வெட்கி, அவனிடத்து மிகுதியும் பொறாமை கொண்டான். அர்ச்சுனன் மனம் திருப்தியுறவே, துரோணர், ஏகலைவனுக்கு அவன் கற்ற வித்தை பயனற்றுப் போம்படி, அவனுடைய வலது கைக் கட்டைவிரலைக் குரு தக்ஷிணையாகப் பெற்றனரென அறிக.

**கிரீடி தன்னைக்கொன்ற தங்கதன் வீரம் கண்டு மகிழ்ந்தது**:—முற்கூறிய படி ஏகலைவனது வன்மை கண்டு பொறாமையுற்ற அர்ச்சுனன்,

மணலூர் மன்னனுகிய சித்திரவாகனனது மகள் சித்திராங்கதையை ஒரு காலத்தில் மணந்து, பப்பிருவாகனன் என்ற ஓர் மகனைப் பெற்றான். (இச் சித்திராங்கதையைத்தான் 'அல்லியரசாணி' யென்றும், பப்பிரு



வாகனனைப் 'புலந்திரன்' என்றும் பாமரர் கூறுவர்) தர்மபுத்திரன் செய்த அசுவமேத யாகத்தில், இப் பப்பிருவாகனன், அசுவத்தைத் தடுக்கவே, அர்ச்சுனன் அவனுடன் அவன் இன்னுனென அறியாமற் பொருதான். நிகழ்ந்த கடும்போரில் பப்பிருவாகனன் வெற்றியாளனாகி அர்ச்சுனனை அவன் தன் தந்தையென்று அறியாது கொன்றேவிட்டான். பிறகு 'உலூபி' என்ற நாக கன்னிகை, தன் நாயகனான அர்ச்சுனனை உயிர்ப் பித்த பின்னரே, பப்பிருவாகனன், அர்ச்சுனனைத் தன் தந்தையென அறிந்து, தக்க மரியாதை செய்து, அசுவமேதக் குதிரையை அவனிடம் ஒப்புவித்தான். அப்பொழுது அர்ச்சுனனுக்குத் தன் மகனது வீரத்தைப் பற்றிய மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லாதிருந்தது" என்பதே. நிற்க.

"தந்தையினும் கற்றோரே தம்மக்களது அறிவைக் கண்டு மகிழ் பவர்" என்று பொருள்பட உரை கூறி, அதற்கு, 'மன்னுயிர்' என்பது ஈண்டு அறிவுடையார் மேல் நின்றது, அறிவுடைமை கண்டு இன்புறு தற்கு உரியவர் அவராதலின்." எனக் காரணம் உரைக்கின்றார் பரி மேலழகர்.

'வேதப் பொருள்உரைத்தான் வேள்அரனுர்க்(கு)' என்ன
மாதுமையாள் மிக்குவந்தாள் வள்ளுவரே!—ஓதுங்கால்[னுமே
ஈன்ற பொழுதிற் பெரிது (உ)வக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக் கேட்ட தாய். (௬)

(அ-ம் முதலியன):—வேள்-முருகக் கடவுள், அரனுர்க்கு-பரமசிவ னுக்கு, உமையாள்-பார்வதி தேவி, மிக்கு-மிகவும், உவந்தாள்-மகிழ்ந் தாள், ஈன்ற பொழுதில்-மகனைப் பெற்ற காலத்தில் உண்டாகும் மகிழ்ச் சியினும், உவக்கும்-மகிழ்வாள், சான்றோன் – கல்வி கேள்விகளில் நிறை ந்தவன்.

வேள், அரனுர்க்கு வேதப் பொருள் உரைத்தது:—சுப்பிரமணியக் கடவுள், 'ஸ்கந்தகிரி'யில் இருக்கையில், ஒரு நாள் பிரமதேவன் தன்னைத் தக்கவாறு வணங்காது செல்லக் கண்டார். கண்டதும், பிரமனை அழைப்பித்து "ஐய! நும்தொழில் யாது?" என்று கேட்க, தான் 'சிருஷ்டி கர்த்தா என்றும், வேதங்கட்குத் தலைவன் என்றும், அவன் இறுமார்ந்து உரைத்தான். அது கேட்டு அவர், 'உமக்கு வேதம் வருமாயின் தயை செய்து கூறுக' என, அவன், 'ஓம்!' எனத் தொடங்க, "'ஓம்' என்றால் என்ன?" என வினவினர் குமரக்கடவுள். அதற்குப் பிரமன் 'அது பிரணவமந்திரம்' என்னலும், அப்பிரணவத்திற்குப் பொருள் கூறித் தயை செய்து மேற் செல்க" என்றனர். அதன் பொருள் அறியாது பிரமன்



மயங்கி நிற்க, அவனைச் சிரத்திற் குட்டிச் சிறையில் இட்டனர். பிறகு விஷ்ணு முதலிய தேவர்கள் சிவபிரானிடம் சென்று பிரமனை விடுதலை செய்யுமாறு வேண்ட, அவர் முருகக் கடவுளிடம் போய் பிரமனைச் சிறையிட்டதற்குக் காரணம் கேட்டு அவரை நோக்கி, "மகனே பிரணவத்திற்குப் பொருள் நீ கூறமுடியுமா?" என்ன, அவர் 'கூறும்' என உரைத்து ஈசுவரன் மகிழ அவர்க்கே உபதேசம் செய்தனர்" என்பதே.

> இன்உதவி செய்யா(து) இராமன், தனைப்பெற்ற
> மன்இறப்பக் காடுறல்என்? வள்ளுவரே!—முன்னே
> மகன் தந்தைக்(கு) ஆற்றும் உதவி'இவன் தந்தை
> என்நோற்றான் கொல்!'என்னும் சொல். (ய)

(அ-ம் முதலியன):—இன்உதவி-இனிய உபகாரம், மன்-தசரத மன்னன், ஆற்றும்-செய்யும் நோற்றான்கொல்!-தவம் இயற்றினனோ!, சொல்-சொல்லும்படி நடந்து கொள்ளலாம்.

தசரத மன்னன் இறக்கும்படி ஸ்ரீராமன் காடேற்றது பிரசித்தம்.

மரணமே தன்தந்தைக்கு ஸம்பவித்த போதிலும் "அவனது வாக்கைப் பரிபாலனம் செய்வதே" அவனுக்கு மகனுகிய தான் செய்யும் பேருதவி என்று ஸ்ரீராமன் உணர்ந்தே சென்றுன் என அறிக.

---

## எட்டாவது அதிகாரம்.

---

### அன்புடைமை.



*தேராருந் தாமுணரக் கன்னன் சிதைந்தகளன்*
*வாரா அழுதாளே வள்ளுவரே!—சூரன்பெண்*
*அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ்? ஆர்வலர்*
*புன்க(ண்)ணீர் பூசல் தரும்.* (க)

(அ-ம் முதலியன):—தேரார்-அறியாதவர்கள், சிதைந்த - இறந்த, களன்-போர்க்களத்தில், வாரா-வந்து, சூரன் பெண்-சூரசேனனது மகளாகிய குந்தி தேவி, ஆர்வலர்-அன்பர், புன்கண்ணீர்-அற்பக் கண்ணீர்த் துளிகள், பூசல் தரும்-(அன்பை யாவரும் அறிய) வெளிப்படுத்தும்.



கன்னன் சிதைந்த களத்தில் அறியாரதும் அறியக் குந்தி அழுதது:— தன் தந்தை கட்டளைப் பிரகாரம் குந்தி துர்வாசர்க்கு ஏவல்புரிந்து அவரை மகிழ்வித்ததும், திரிகாலமும் உணர்ந்த அவர், இனி அவட்கு நிகழ இருக்கும் துர்ப்பாக்கியத்தை உணர்ந்து, அவள் மீது கருணை கூர்ந்து, தியானித்த மாத்திரத்தில் பிரசன்னமாகி மக்கட்பேறு அளிக்கத் தக்க மந்திரோபதேசம் செய்ததும், அம் மந்திரத்தைச் சோதித்தறியக் குந்தி,

அவன், கன்னிப்பருவத்திலேயே அதனை ஜபித்து,சூரியனைக் கருத,அவன் அருளால் கன்னனைப்பெற்றதும்,வள்ளுவர் நேரிசை,3—ஆவது அதிகாரம், 8—ஆவது செய்யுள் விஷயத்தை விளக்கக் கூறியுள்ள செய்தியால் யாவரும் அறிவர். கன்னனைக் குந்தி கன்னிப் பருவத்திற் பெற்றமையின், அவள் நாணி, அபவாதத்திற்கு அஞ்சி, எவரும் அறியாமல் அவனை ஓர் பேழையில் இட்டு,யமுனை யாற்றில் விட்டனள். இங்ஙனம் விடப்பட்ட கன்னன், அரமனைத் தேரோட்டியால் எடுத்து வளர்க்கப்பட்டு, அஸ்திர சஸ்திர வித்தையில் தேர்ந்து,துர்யோதனனது உயிர்த்தோழ னாயினன். கொடையைப் பிறவிக்குணமாகக் கொண்ட இவன், தன்னுடைய மகன் என்று,குந்திக்கும் தெரியாது. ஸ்ரீ கிருஷ்ணன் ஒருவனே இவனது உண்மை வரலாறு அறிந்தவன். அர்ச்சுனனைக் காக்க நாகக்கணையை அவன் மீது ஒருமுறைக் கதிகம் விடக்கூடாதென்றும், பாண்டவர் கட்சியிற் சேர வேண்டும் என்றும் கன்னனைக் கேட்டு வருமாறு குந்தியை ஸ்ரீகிருஷ்ணன் அனுப்பநேர்ந்த சமயத்தில் தான், அவளுக்கு, அவனைப் பற்றிய உண்மை, ஸ்ரீ கிருஷ்ணனால் அறிவிக்கப்பட்டது. குந்தி கன்னனிடம் சென்று, அர்ச்சுனனைப்பற்றிய வரமொன்றே பெற முடிந்தது. கன்னன் அப்பொழுது அவளை நோக்கி,

> "அன்னை! நீ வேண்டிற்றுப் பெற்றாய்; அது ஈந்தேன்
> உன்னைநான் வேண்டுவதிங(கு) ஒன்(று)உண்டு:—பின்னை
> அலர்கதிர்வேற் கையான் அருச்சுனன்கைப் பட்டால்
> முலைகருக பல்லரசர் முன்."

நான் அநாதைப்பிரேதம் என்றாவது இழிகுலத்தான் என்றாவது எவரும் எண்ணாதிருக்குமாறே இவ்வரம் வேண்டுகிறேன்". என்று சொல்லி முடிக்குமுன், அவள் புத்திரவாஞ்சை மேலிட்டுக் கண்ணீர் விட்டுக் கதறலாயினள். அப்பொழுது, கன்னன் அவளைத் தேற்றித் "தாயே! அழுதாற் பயனென்ன? நொந்தாற் பயனென்ன? ஆவதில்லை.

காஞ்சு காதலத்தோய்! அந்தோ! அந்தோ!
கடவுளர்தம் மாயையினாற் கழிவுற்றாயே"!
என்று கதறினன் என்பதே.

யார்க்(கு)ஆம் இவறியான் செல்வம்? இகல்வெல்ல
மாற்(கு)அளித்தான் என்பு,முனி, வள்ளுவரே!—பார்க்குங்கால்
அன்பிலார் எல்லாம் தமக்குரியர்; அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு. (உ)



(அ-ம் முதலியன):— இவறியான்-உலோபி, இகல்-பகை (வனை விருத்திராசுரனை), மாற்கு-இந்திரனுக்கு, என்பு-எலும்பு, முனி-ததீசிமுனி, எல்லாம்-எல்லாப் பொருளாலும், என்பும்-தமது உடம்பினும்.

மாலுக்கு முனி தன் எலும்பு அளித்தது:—சிவபக்தியிற் சிறந்த ததீசி முனிவர் தர்ம குணமும், தய சிந்தையும் வாய்ந்த ஓர் தபோதனர். பாற்கடல் கடையத் தேவாசுரர்கள் சென்ற காலையில், தங்கள் ஆயுதங்களை இம் முனிவர்பால் ஒப்புவித்துவிட்டுச் சென்றனர். சென்றோர், பன்னெடுங்காலம் அவற்றிற்காக வரவேனும ஆள்விடவேனும் இல்லாமையின், அம்முனிவர் அதனை விழுங்கி நிஷ்டையில் அமர்ந்தனர். சின்னாட்களுக்கெல்லாம் அவ ஆயுதங்கள் அவரது முதுகந் தண்டோடு முதுகந்தண்டாய் விட்டன. நிற்க.

இந்திரன் விருத்திராசுரனைக் கொல்வதற்குத் தன்னை வச்சிராயுதம் வலியற்றதெனக் கண்டு விசனித்ததைத் திருமால் அறிந்து, அவனை நோக்கி, "இக்ஷணமே ததீசி முனிவரிடம் செல், தேவாசுரரது ஆயுதம் யாவும் இரண்டறக் கலந்ததால் ஆக்கப்பட்டதாகும் அவரது முதுகெலும்பு. அதனினும் வலியுள ஆயுதம் வேறில்லை. ததீசி முனிவர் தனக்கென வாழாப் பிறர்க்குரியாராதலின், அதனைக்கேட்டு முன்னர் அவர் பலர்கலம்கருதி ஈவர்" என்னலும், இந்திரன் அவ்வண்ணமே முனிவரிடம் சென்று யாசித்தனன். உடனே முனிவர், அகமகிழ்ந்து, தம் பிராணவாயுவை எழுப்பிப் பிரம

ரந்திர வழியாக உடம்பை யகன்று, முதுகெலும்பு ஈர்த்து முத்தியடைந்து தம் புகழுடம்பை என்றும் நிலை நிறுத்தினர்” என்பதே.

> மான்பிறப்பில் எல்லாம் உணர்(ந்து)ம் அன்பு வாய்ப்ப,மக்கள்
> வான்பிறப்புற் றான் பரதன் வள்ளுவரே!—வான்புகழும்
> அன்போ(டு) இயைந்த வழக்(கு) என்ப ஆருயிர்க்கு
> என்போ(டு) இயைந்த தொடர்பு. (௩)

(அ-ம்முதலியன):—வாய்ப்ப-அடைந்த காரணத்தால்,மக்கள் வான் பிறப்பு-சிறந்த மனித ஜன்மம்,உற்றான்-அடைந்தான்,பரதன்-ஜடபரதன், வான் புகலும்-மேலாகச் சொல்லப்படும், இயைந்த-பொருந்தியதற்கு வந்த, வழக்கு-வழியின் பயன், ஆருயிர்க்கு-பெறுதற்கு அரிய மனிதர் உயிர்க்கு, என்ப-என்று அறிந்தோர் கூறுவர்.

ஜடபரதன் வரலாற்றை வள்ளுவர் நேரிசை 8-ஆவது அதிகாரம் 10-ஆவது செய்யுளை விளக்கக் கூறிய செய்தியால் அறிக.

> தாய்சொற்றும் தம்பியர்பாற் சாரா(து) அராக்கொடியோன்
> வாய்நண்பு மிக்கானே வள்ளுவரே!—ஆயகன்னன்

## வள்ளுவர் நேரிசை.

> அன்(பு) ஈனும் ஆர்வ முடைமை அதுஈனும்
> நண்(பு) என்னும் நாடாச் சிறப்பு. (௪)

(அ-ம் முதலியன):—தாய் சொற்றும்-மாதாவாகிய குந்தியே வற்புறுத்திக் கூறி அழைத்தும், அராக்கொடியோன்-பாம்புக் கொடி பிடித்தவனை துரியோதனன், வாய்-பெற்ற, நண்பு-சிநேகம், அன்பு-மனைவி மக்களிடம் வைக்கும் அன்பு, ஈனும்-தரும், ஆர்வம் உடைமை-பிறரிடம் ஆசையுடனிருத்தல், அது-அவ்வாசையுடனிருத்தல், நாடா-அளவிறந்த.

தாய் சொற்றும் தம்பியர்பாற் கன்னன் சாராது அராக்கொடியோன் பால் நண்பு கொண்டது பிரசித்தம்.

சிற்றின்பம் நீங்கினர்க்கே பேரின்(பு) எனச் சொலும்நூல்
மற்றிரண்டும் நீயிருந்தீர் வள்ளுவரே!—எற்றேனே?
அன்புற் றமர்ந்த வழக்(கு)என்ப வையகத்(து)
இனபுற்றார் எய்தும சிறப்பு.

(அ-ம் முதலியன):—இரண்டும்-சிற்றின்பமும் பேரின்பமும், எற்றேனே? எதனாலோ? அமர்ந்த-(இல்லறததோடு) பொருந்திய, வழக்கு-வழியின் பயன், இன்பு உற்றர்-(இல்வாழ்க்கையில்) இன்பத்தை அனுபவித்தவராகி, எய்தும்-(பின்பு விண்ணுலகத்திற் சென்று) அடையும், சிறப்பு-பேரின்பத்தை.

"இவவுலகில் இல்வாழக்கை யின்பம் அனுபவித்தவராகி, பின்பு விண்ணுலகிற் சென்றடையும் பேரின்பத்தை, "அன்புடையோராய், இல்லறத்தோடு பொருந்திய வழியின் பயன்" என மேலோர் கூறுவர்" என்பது வள்ளுவர் குறளின் கருத்து. வாசுகி அம்மையுடன் அவர் இல்லறம் கடத்திப் புகழுற்றதை அறியாதார் சிலரே அவ்வம்மையின் பிரிவாற்றாது அவர் இரங்கிக் கூறிய

அடிசிற் கினியாளே! அன்புடையாளே!
படிசொற் கடவாத பாவாய்!—அடிவருடிப்
பின்தூங்கி முன்எழுந்த பேதையே! போதியோ
என்தூங்கும் என்கண் இரா.?"

என்ற செய்யுளே அவள் சற்குணம் நிறைந்த கற்புடைப் பெண் என்பதை விளக்கப் போதியதாகும்.

நொந்தழி அன்புடையார் நோனர் எனிற்பெற்றோர்
மைந்தரைத்தண் டித்தலென்னோ? வள்ளுவரே!—முந்தும்
அறத்திற்கே அன்புசார்(பு)' என்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை. (சு)

(அ-ம் முதலியன):—நொந்தஉழி-வருந்தும்போது, நோனர்-(கண்டு) சகிக்கமாட்டார்கள், முந்தும்-முதன்மையான, சார்பு-துணை, அறியார்-உண்மை அறியாதவர், மறம்-பாப நீக்கத்தின் பொருட்டு உண்டாகும் கோபம் தண்டனை முதலியன, அஃது-அந்த அன்பு.

தேவருந்தான் தொட்டால் சிதையவரம் பெற்றான், அம்
மாவரம்தன் னால்மடிந்தான் வள்ளுவரே!—தாவியே
என்(பு)இல் அதனை வெயில் போலக் காயுமே
அன்(பு)இல் அதனை அறம். (எ)

(அ-ம் முதலியன்):—சிதைய-(எரிந்து) அழிய, வரம் பெற்றான்-வரம் பெற்ற பஸ்மாசுரன், மா வரம்-சிறந்த வரம், தாவியே-பற்றியே, என்பு இல் அதனை-எலும்பு என்பதில்லாத (புழுக்கள் போன்ற) பிராணிகளை, வெயில்-தீ, காயும்-உக்கிரத்துடன் வருத்தும், அன்பு இல் அதனை-அன்பில்லாத (மிருகத்தன்மையுள்ள) மனிதனை, அறம்-தரும தேவதை.

பஸ்மாசுரன் பஸ்மமான வரலாறு:—பஸ்மாசுரன் என்னும் அரக்கன் ஒரு சமயம் பரமனைக் குறித்துக் கடுந்தவம் புரிந்தனன். அவனது தவத்திற்கு மெச்சிய கடவுள் அவன்முன் போந்து, "நீ வேண்டுவன கேள். யாதும் தருவேம்" என்ன, அசுரன், "யார்தலையில் யான் கை வைப்பேனோ, அவர், சிரவிற் கைபட்ட மாத்திரத்தில் எரிந்து நீறாக வேண்டும்" மென்றான்.

பரம சிவக் கடவுள் 'அங்ஙனமே ஆகுக' என அநுக்ரகிக்க, அம் மூடமூர்க்கன், தன் வரம் பலிக்கும் விந்தையை உடனே கண்டு மகிழக்கருதி, தனக்கு வரமளித்த பரமன் தலையிலேயே கைவைக்க ஆரம்பித்தனன். உடனே ஈசன் அவனது நன்றியில் செயலுக்கு அதிசயித்து, அங்கிருந்த ஓர் ஐவேலிக்காயில் மறைந்து நின்றார். மூடராக்கன் சிவனை எங்கும் தே

டியும் அகப்படாமையின் கோபம் மேலிட்டவனாகி உலையாமுயற்சியுடன் அவரைத்தேடி அலையலாயினன். இவனது பிடிவாத தீர்மானமறிந்த தேவர்கள் அஞ்சி நடு நடுங்கித் தங்நலம் கருதித் திருமாலைச் சரண்புகுந்து நிகழ்ந்தன கூறினர். திருமால் அவர்கட்கு அபயம் அளித்து, ஓர் மோகினி வடிவெடுத்து அசுரன் முன் நின்றார். அசுரன் சிவனைத் தேடும் முயற்சியை





அறவொழித்துக் காமவெறியால் மயங்கி மோகினியைக் கைப்பற்றச் சென்றபோது, மோகினி, அவன் நீராடி நித்யகர்மானுஷ்டான முடித்து வந்தபின் அவனுடன் சந்தோஷமாய் இருப்பதாக வாக்களிக்க, அவனும் சென்று நீராடினன். பிறகு, சந்தியாவந்தனம் செய்யும் போது ஆசமனீயம் செய்கையில், பகவானது திரு நாமங்களைக் கூறித் தேகத்திலுள்ள பற்பல இடங்களையும் தொட்டுச் சுத்தி செய்யுங்கால் "தாமோதர!" எனக் கூறித் தன்தலையிற் கைவைத்தான். சிரசிற் கை பட்ட மாத்திரத்தில் பற்றி யெறிந்து பஸ்மமாயினன் அசுரன்" என்பதே.

> மாய்ந்தோர் உயிர்க்கும் மறைபெற்றும் வீரரோடு
> மாய்ந்தான் சுயோதனனும் வள்ளுவரே!—ஆய்ந்தக்கால்
> அன்(பு) அகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பார்க்கண்
> வற்றல் மரம்தளிர்த் தற்று. (அ)

(அ-ம் முதலியன):—மாய்ந்தோர் – இறந்தோர், உயிர்க்கும்–பிழைக்கின்ற, மறை–ரகஸ்ய மந்திரம், சுயோதனன்–துர்யோதனன், அகம்–மனம், வாழ்க்கை–இல்லற வாழ்க்கை, வன்பார்க்கண்–கடின நிலததில், வற்றல் மரம் – பட்டுப் போன மரம், தளிர்த்தற்று–தளிர்த்து முளைத்ததைப் போன்ற தாகும்.

சுயோதனன் மாய்ந்தோர் உய்யும் மறை பெற்றும் மாய்ந்தது:—பாண்டவர் ஐவரும் கௌரவர் நூற்றுவருடன் தமது தாயபாகத்தைப் பெறக் கருதி, ஸ்ரீ கிருஷ்ணனைத் துணைக்கொண்டு புரிந்த யுத்தத்தில், 17 தினங்

களுக்குள் துரியோதனனது படை அநேகமாய் அழிந்துபட்டன. அவன் 18-ஆவது தினத்தில் ஆதரவேது மற்றவனாகி 'யாது செய்வோம்' என எங்கி, தான் முன்பு கற்றறிந்த 'அமிர்த சஞ்சீவி' மந்திரத்தை ஜபிக்கத் தீவிரென ஒரு மடுவிற் குதித்து மறைந்தான். இம்மந்திர பலத்தால் இறந்த தன் தம்பிமார்களையும் சேனையையும் மீளச் செய்து பாண்டவர்களுடன் போராடி அவர்களைக் கொன்று வெற்றி பெற வேண்டுமென்பதே அவனது நோக்கம். ஆயினும், அன்பின்றியும் துவேஷபுத்தியுடனும் இது செய்யப்பட்டதால், இம் முயற்சிக்கு இடையூறு நேரிட்டது: அவன் மடுவில் ஒளிந்த விவரம் வேடர்கள் மூலம் வீமன் அறிந்து, கொடுஞ் சொற்கூறி அவனை வெளியேற்றிக் கொன்றான்" என்பதே.

ஏவல் இடம்பொருள்கள் யாவுமிருந் தென்? மன்னன்
மாவிருந்(து)ஏ லான்கண்ணன் வள்ளுவரே!—மேவாப்
புறத்(து) உறுப்(பு) எல்லாம் எவன் செய்யும் யாக்கை
அகத்(து) உறுப்(பு) அன்(பு) இல் லவர்க்கு? (௯)

## அன்புடைமை. 51

(அ-ம் முதலியன):—ஏவல்-வேலைக்காரர், மன்னன் - துர்யோதன ராஜனது; ஏலான்-அங்கீகரிக்கவில்லை, மேவா-விருப்பில்லாத அல்லது பொருந்தாத, யாக்கை அகத்து உறுப்பு-உடம்பின் அகத்தே நின்று இல்லறத்திற்கு அங்கமாகிய, இல்லவர்க்கு-இல்லாதவர்க்கு.

கண்ணன் துர்யோதன மன்னனது விருந்து ஏலாமை:—பாண்டவர்கள் ஒருகாலத்தில் கண்ணிழந்து மாயக் கவறாடி நாடு நகரம் முதலியன இழந்ததும், இழந்த யாவையும், பின்னர், திரௌபதியின் கற்பு வலியாலும் திறத்தாலும் மீட்டும், துர்யோதனாதியர் அவற்றைத் தர உடன்படாது 12-வருஷ வனவாசமும் ஒருவருஷ அஞ்ஞாத வாசமும் திரௌபதியுடன் ஐவரும் குறைவற முடித்துத் திரும்பினால்தான், அவர்குட்குரிய தாய பாகம் கொடுபடுமென்று கூறியதும், யாவரும் அறிந்ததே. துர்யோதனாதியர் விதித்த நிபந்தனைப் பிரகாரமே தருமனாதியர் செய்து, தமக்குரிய பாகங்களைத் தருமாறு கேட்டுவர ஸ்ரீகிருஷ்ணனைத் தூதனுப்பினர். ஸ்ரீ கிருஷ்ண

ன் அவ்வாறே சென்று, துர்யோதனனுடைய விருந்தாளியா யிராமல், பரம பாகவதனும் உத்தமனுமான விதுரனையே தனது அதிதியாகக் கொண் டான். இஃதறிந்த துர்யோதனன் சினந்து, "வணங்காமுடி மன்னனாகிய என்னிடம் வாராது, பரம ஏழையும் இழிந்தவனுமான விதுரன் விருந்து ஏற்றதென்?" எனக் கூற ஸ்ரீ கிருஷ்ணன், "ஒருவர் வீட்டில் ஒருவர் சாப் பிடக் காரணம் இரண்டே உண்டு: ஒன்று அன்பு. மற்றொன்று ஆபத்து. எனக்கோ ஆபத்தேதும் இல்லை. உனக்கோ அன்பில்லை. ஆகையால் உன் வீட் டில் நான் எங்ஙனம் உண்பது? அன்புளான் விதுரனே ஆதலின் அவன் அக த்தில்தானே நான் உண்ணவேண்டும்? இதில் என்ன தவறு?" என்று பொருள்பட,

"அன்பின் இடுஞ்சோறும் ஆபத் திடுஞ்சோறும்
இன்புட(ன்)இ டுஞ்சோ(று) இரண்டென்டே—அன்புநீ
இல்லாத உன் அகத்தில் உண்ணுமா(று) எங்ஙனே?
மல்லாடு திண்டோளாய்! மற்று.

எனக் கூறினன். நிற்க. இவ் 'வள்ளுவர் நேரிசை வெண்பா'வின் முற் பகுதியில் உள்ள கருத்தை

"இல்லானுக்(கு), அன்பிங் கிடம்பொருள் ஏவல்மற்
றெல்லாம் இருந்துமவற் கென்செய்யும்?—நல்லாய்!
மொழியிலார்க் கேது முதுநூல்? தெரியும்
விழியிலார்க் கேது விளக்கு?"

என்ற நன்னெறி வெண்பாக் கருத்தொடு ஒப்பிட் டறிக.

## 52 வள்ளுவர் நேரிசை.

தான் பெற்ற நகர்போய் சாற்றுமை யாற்சபித்த
மான்பொன்றுக்காரணமென்? வள்ளுவரே!—யான்பெற்றென்?

அன்பின் வழிய(து) உயிர்நிலை. அஃதிலார்க்(கு)
என்புதோல் போர்த்த உடம்பு (ம)

(அ-ம் முதலியன):—நாகர்-பாம்புகள், மான்-மான்போன்ற கத்துரு, போன்ற-இறவாத, ஊன்-சரீரம், அன்பின்வழியது-அன்புமுதலாக அதன் வழிநிற்கும் உடம்பே, உயிர்நிலை-உயிர் நிற்கும் உடம்பாகும்.

பொய் சாற்றமையின் கத்துரு தம் மக்களாகிய நாகரைச் சபித்தது:—காசிப முனிவர்க்குக் கத்துரு, விநதை என்ற இரு மனைவியருண்டு. இவர்களில் கத்துரு நாகங்களை ஈன்றவள். விநதை கருடன், அருணன் முதலியோரது தாய். கத்துருவும் விநதையும் ஒருநாள் திருப் பாற்கடற் கரையில் உச்சைச்சிரவம் என்ற இந்திரனது வெள்ளைக் குதிரையைக் கண்டனர். கண்டதும் அதனைக் குறித்து வேடிக்கையாக ஸம்பாஷிக்கையில், கத்துரு, விநோதார்த்தமாக, 'அக்குதிரைவால் கறுப்பு' என்னலும், விநதை "இல்லை. அது முற்றிலும் வெள்ளை" என, உண்மையைச் சாதித்தாள். கத்துருவுக்கு இதன் உண்மை தெரிந்திருந்தும், அவள் சொல்வதற்கு இணங்குவது தனக்கு அகௌரவமென எண்ணி, அது கறுப்பென்றே வாதித்தாள். இவ்வாறிருவரும் இசைந்து போகாமையின், வாக்குவாதம் வரவர முற்றியது. கடைசியில் மறுநாள் இருவரும் குதிரையருகிற் சென்று பார்க்க வேண்டுமென்றும், யார் சொல் பொய்யாய் விடுகிறதோ, அவர், மற்றவர்க்கு அடிமையாய் விடவேண்டுமென்றும், தம்முள் நிர்மானித்துக் கொண்டு வீடு திரும்பினர் மாலையானதும், கத்துரு தம்மக்களை நோக்கி, "எப்படியாவது என் வார்த்தையை மெய்ப்பிப்பதற்காவன நீங்கள் செய்து தீரவேண்டும்" என வற்புறுத்திக் கூறினள். ஆயினும் ஆதிசேஷன் வாசுகி முதலியோர் "உச்சைசிரவத்திற்கு ஓர் ஒச்சம் கற்பிப்பதும், பொய் கூறுவதும், பாபம்" எனக்கூறி, அதும் செய்ய மறுத்துவிட்டனர். கார்க்கோடகன் ஒருவனே தாய்க்கஞ்சி, ஓடிக் குதிரைவாலை சுற்றிக் கறுக்கச் செய்தனன். இஃதறியாப் பேதை விநதை, மறுநாள் அதனைக் கண்டு கத்துருவுக்குத் தன்வாக்குப் பிரகாரம் அடிமையாயினள். கத்துரு, தன் மொழியை மறுத்து அதனால் தன்னை அவமானத்திற்குட் படுத்தி இருந்த தன் மக்கள் யாவரையும், சர்ப்ப யாகத்தில் இறக்குமாறு சபித்தனள்" என்பதே.

"தொடர்ந்த மும்மல முருக்கி வெம்பவக் கடல் தொலை யக் கடந்து ளோர்களும் கடப்பரோ மக்கள்மேற் காதல்?" கந்தரு



இயற்கைக்குவிரோதமாய்த் தான்பெற்ற மக்களிடம் அன்பிலனாய் இருந் தமையின்,இருந்தும்,அவன் இறந்தவனே ஆயினன். உயிர் இருந்தால் அன் றே சாவு என்பதும்உண்டு. அன்பில்லா உயிர்,வெறும் என்பு தோல்போர் த்த யாக்கையே அன்றோ?

---

ஒன்பதாவது அதிகாரம்.

---

## விருந்தோம்பல்.

---

*வித்தும் அரித்திட்டு விருந்தோம்பி னூர்மாறர்*
*வைத்த பொருள் போயபின்னும் வள்ளுவரே!—மொய்த்தே*
*இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி*
*வேளாண்மை செய்தற் பொருட்டு.* **(அ)**

(அ-ம் முதலியன்):—வித்து-முளை செல், விருந்து-விருந்தினராக வந்த பரமசிவக் கடவுளை. ஓம்பினூர்-உபசரித்தார், மாறர்-இளையான்குடி மாற நாயனூர், மொய்த்து-மிகுதியும், இருந்து ஓம்பி இல்-இல்லின்கண் இருந்த பொருள்களைக் காப்பாற்றி, விருந்து - புதிதாக வந்தவர்கள், வேளாண்மை-உபகாரம்.

'இருந்து ஓம்பி இல்'என்பதை 'இல் இருந்த (பொருள்) ஓம்பி' என ஆக்கிப் பொருள் கொள்க.

மாறனார் வித்தும் அரித்து விருந்தோம்பியது:—பரமக்குடிக் கடுத்த இளையான்குடி, என்னும் ஊரிலே, வேளாளர் குலத்திலே தோன்றியவரும், 63-நாயன்மார்களில் ஒருவருமாகிய மாறனார், சிவனடியார்கட்குத் திருவமுது செய்விப்பதையே தமது கடமையாகப் பூண்டு ஒழுகியவர். இவரைச் சோதிக்கக் கருதிய சிவபெருமான், இவர்க்கு ஆற்றற் கரிய வறுமைப் பிணியுண்டாக்கினர். அப்போதும் அவர், தம் கொள்கை மாறாது, கடன்பட்டாயினும் விருந்தோம்பி வந்தனர். ஒருநாள், பரமசிவக்கடவுள், பெருமழை பொழியும் இரவில், சிவனடியார் வேடத்துடன் நாயனாரது வீடுற்று உணவு வேண்டினர். அகாலத்தில் வந்தும், அவரை, நாயனார் அக மகிழ்ந்து வரவேற்று, பொற்புறு கற்பரசியாகிய தம் மனைவியிடம் சென்று 'கொண்டான் குறிப்பறியும்' அக்கோதையை நோக்கி,



“நமக்கு முன் பிங்(கு) உணவிலை. ஆயினும்
இமக் குலக்கொடி பாகற்(கு) இனியவர்
தமக்கு, நாம்இன் அடிசில் தகவுற
அமைக்கும் ஆ(று)எங்ஙன்? ஆரணங்கே!” என
மாது கூறுவள்: “மற்றொன்றும் காண்கிலேன்
எதி லாரும் இனித்தரு வார்இலை.
போது வைகிற்று. போம் இடம் வேறிலை.
தீது செய்வினை யேற்(கு)என் செயலென்று
செல்லல் நீங்கப் பகல்வித் தியசெந்நெல்
மல்லல் நீர்முளை வாரிக் கொடுவந்தால்
வல்லவா(று)அமு(து) ஆக்கலும் ஆகும்.மற்
றல்ல தொன்றறி யேன்’’ என்(று) அயர்வுற,

அங்ஙனமே,நாயனார் வயிலிற் சென்று,நென்முளை வாரிவந்து, பாத்தி நீர

ம்பா இளங்கீரையுடன் அதை அவளிடம் கொடுத்தனர். கொடுக்கவும்,
அவள் நெல்லை வறுத்துப் பதம் செய்து அரிசியாக்கிச் சமைத்து, அடி
யார் உருக்கொண்டு வந்த அரனார்க்குப் படைத்தனர். உடனே சிவபிரான்
நாயனாரது பக்தி முதிர்ச்சிக்கும் அவரது மனைவியின் இல்லற மாட்சிக்கும்
வியந்து, நித்தியானந்தப் பெருவாழ்வு ஈந்தருளினர்." என்பதே. இவரது
முழு வரலாற்றையும் பெரிய புராணத்தினின்றும் அறிந்துணர்க.

*நீடுவா ழச்செய்யும் நெல்லிக் கனிஅதிகன்*
*வாடா(து)ஔ வைக்கீந்தான் வள்ளுவரே!—நாடில்*
*விருந்து புறத்ததாத் தான்உண்டல், சாவா*
*மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.* (உ)

(அ-ம் முதலியன):—நீடு-நெடுகோள், அதிகன்-அதியமான் நெடுமா
னஞ்சி, வாடாது-(பசி முதலியவற்றால் வருந்தாதிருக்குமாறு), நாடில்-
ஆராயின், விருந்து-அதிதிகள், புறத்ததாக-வீட்டின் வெளிப்புறத்தி
ருக்க, சாவா மருந்து-மரணமுறச்செய்யாத் தேவாமிர்தம், வேண்டற்பாற்
றன்று-விரும்பப்படத் தக்க தன்று.

அதிகன் நெல்லிக்கனி ஔவைக்கு ஈந்தது:—மழவர்களுக்குத் தலை
வனும் கடையெழு வள்ளல்களில் ஒருவனுமான அதியமான் நெடுமா



னஞ்சி,ஓர் சிறந்த யுத்த வீரன். இவனுக்கு ஒருகாலத்தில் உண்போரைத்
தீர்க்காயுளுடன் ஜீவித்திருக்கச் செய்ய வல்ல கருநெல்லிக் கனி கிடைத்
தது. (இக்கனியினது மகிமை, 'இனிய உளவாக' என்றுதொடங்கிய குற
ளில், 'கனியிருப்ப' என்பதற்குப் பொருள் கூறி வரும்போது,பரிமேலழ
கர், 'இனிய கனிகள்' என்றது 'ஔவையுண்ட நெல்லிக் கனிபோல்
அமிழ் தான வற்றை' என்று கூறியதாலும் நன்கு விளங்கும்.) அதிசய
மான இக்கனியின் பெருமையை அவன் நன்குணர்ந்திருந்தும், அவனுக்கு

அக்கனி கிடைத்த சமயம் ஔவை அவனது அதிதியாகச் சென்றிருந்தமையால் தன் போன்ற யுத்த வீரனினும், காற் பொருளும் பயக்கும் கல்வியிற் சிறந்த உத்தமி உயிர்வாழின், உலகோர்க்கு மிக்க நன்மை யுண்டென உணர்ந்தும், ஆதித்தியம் கருதியும், முழுக் கனியையும் ஔவைக் கீந்து புகழ் பெற்றான்'' என்பதே.

பல்லா யிரவர்க்கூண் பாண்டு மகன்படைத்தான்
வல்லாத காட்டிலும்போய் வள்ளுவரே!—சொல்லின்
வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று. (௯)

(அ-ம் முதலியன):—ஊண்-உணவு, பாண்டுமகன்-யுதிட்டிரன், வல்லாத-கொடிய, வைகலும்-நாள் தோறும்; பருவந்து-துன்பத்தால் வருந்தி, பாழ்படுதல் இன்று-கெடுவது இல்லை.

பாண்டு மகன் வல்லாத காட்டில் பல்லாயிரவர்க்கு ஊன் அளித்தது:—பாண்டவர்கள் சூதாட்டத்தில், தமது நாடு நகர மிழந்து வனவாசஞ் செய்ய நேரிட்டதைத் தௌமியர் முதலிய பன்னீராயிரம் வேதியரும் கேள்வியுற்றனர். இப்பன்னீராயிரவரும் தரும புத்திரனோடு எப்போதும் இருந்தவர்கள் ஆதலின், அவன் வனத்திலிருக்கும் போதும் சென்று, தருமனை நோக்கி ''நீர் நிரம்பிய காலத்தில் குளத்தில் இடைவிடாது இருந்து அஃதில்லாக் காலத்தில் அதினின் றகலும் பறவை போன்றவரல்லர் நாங்கள். அக்குளத்துக் கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போன்றோரே. ஆதலின் உன்னிற்பிரியோம்'' என்று அவனிடமே இருந்து விட்டனர். இங்ஙனம் அவர்கள் கூறியதைக் கேட்டதும், தருமன் தனக்கும், தன்சகோதரர்க்கும் பாஞ்சாலிக்குமுற்ற பரிபவத்தையும் கஷ்ட நிஷ்டூரங்களையும் மறந்து, ''ஐயோ! எங்கள் நிலைமை எவ்வாறாயினும் ஆகுக. என்னை யடுத்திருக்கும் இப்பன்னீராயிரவரும் பசிப்பிணியால் வருந்தித் தவிப்பரே. இவ்வளவு அன்புள்ளவர்களை 'என்னிடம் இராதேயுங்கள்' என்று எப்படிச் சொல்வேன்?'' என்று நெருப்பில் விழுந்த புழுப்போல

தடித்தான். அச்சமயம் சவுனகர் என்ற மகரிஷி தருமனிடம் வந்து, அவன் விசனத்துக்குக் காரணம் கேட்டறிந்ததும் அவனைத் தேற்றி, ஒரு மந்திரத்தை உபதேசித்து, 'இது சூரியனைக் குறித்தது. இதை நியம நிஷ்டையுடன் உச்சரிப்பையாயின் அவனால் உன்குறை தீரும்'' என்று சொல்லிச் சென்றனர். தருமனும் அவ்வாறே அதை ஜபிக்க, சூரியன் அவன் முன் தோன்றி, 'நீ வேண்டும் வரம் கேள்' என்றான். தருமன் பன்னீராயிரவர் நிலைமையையும் கூறிக் குறை பிரக்க, சூரியன் மகிழ்ந்து தருமனை நோக்கி, "இதைக் கைக் கொள்வாயாக. இஃதொரு அக்ஷயபாத்திரம். அறுசுவை உண்டியும் அளிக்க வல்லது இது. எத்தனைப் பேருக்கும் இது உண்டி தர வல்லது'' என்று கூறி ஒரு தெய்விகப்பாத்திரம் அளித்துச் சென்றான். இதனால் சகலரும் சம்பிரமமாக உண்டு மகிழ்ந்து வந்தனர், என்பதே.

> வந்ததுரு வாசற்கு மாவிருந்து செய்த மையால்
> மைந்துற்றான் மாயோனும் வள்ளுவரே!—நந்தா
> அகனமர்ந்து செய்யாள் உறையும் முகனமர்ந்து
> நல்விருந் தோம்புவான் இல். (ச)

(அ-ம் முதலியன):—மைந்து-வலிமை, மாயோன்-ஸ்ரீ கிருஷ்ணன், நந்தா-அழியாத; அகன்அமர்ந்து-மனம் விரும்பி, செய்யாள்-லக்ஷ்மி, உறையும்-வசிப்பள், விருந்து-விருந்தினரை, இல்-வீட்டில்.

துருவாசர்க்கு மாயோன் விருந்தளித்தது:— பரம கோபிஷ்டராகிய துர்வாச மாமுனிவர், ஒருகால் ஸ்ரீ கிருஷ்ணனைக் கண்டு, "நான் உனது அதிதி. சந்திராயணவிரதம் ஒரு மண்டலம் அநுஷ்டிக்க எனக்கு விருப்பம். என் கோபம் நீ அறிவாய். என் மனம் திருப்திபுறுமாறு நீ நடந்து கொள்ள முடியுமாயின், உனது ஆதித்யம் ஏற்கிறேன்'' என்ன, கண்ணன், துர்வாசர் மனப்படி நடப்பதாக முழுமனத்துடனும் ஒப்புக் கொண்டான். கடைசி தினத்தில், முனிவர் தமக்குப் பண்ணிய பாயாசத்தைத் தம் உச்சந்தலை

முதல் உள்ளங்கால் வரையில் தடவுமாறு ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் ருக்மணிக்கும் ஆக்ஞாபிக்க, அவர்களும் அவ்வாறு செய்து மனமகிழ்வித்தனர்" என்பதே. (இச்சமயந்தான், பாயசம், துர்வாசரது கட்டை விரலிற் படாமையால், அவர் சினந்து, ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, "நின் கட்டைவிரலில் அடிபட்டு நின் உயிர் பிரிவதாக" எனச் சாபமிட்டதென அறிக.

பாண்டவர்கள் வனவாசம் செய்த காலத்தில் துர்வாசர் தம்மைத் திருப்திப் படுத்திய துர்யோதனனுடைய வேண்டுகோட்கிணங்கி, தருமனிடம் சென்று, தமக்கும் தம்முடன் வந்தார்க்கும் விருந்தளிக்கவேண்டு

மெனக்கூற, ஸ்ரீகிருஷ்ணன் உண்மையறிந்து, அகாலத்தில் வந்த அவரது சினத்திற்கு அஞ்சித் தவித்த பாண்டவர்க்கு அமைதியுண்டாகுமாறு ஒரு அவிழ்தையுண்டு, முனிவர் வயிறும், அவருடன் வந்தோர் வயிறும் நிரம்புமாறு செய்து, அவர்களை மகிழ்வித்ததும் "ஸ்ரீ கிருஷ்ணன் துர்வாசர்க்கு விருந்தளித்து மகிழ்வித்ததாக"க் கொள்ளுவர் சிலர்.

தீய்ந்தும் புலமெல்லாம் தேர்ந்துலவாக் கோட்டையினால்
வாய்ந்தவிருந் தோம்பினார் வள்ளுவரே!—ஆய்ந்தொருவர்.
வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம். (௫)

(அ-ம் முதலியன):—புலம்-வயல், உலவாக்கோட்டை - குறைந்து அழியா நெற் கோட்டை, வாய்ந்த-பெற்ற, ஓம்பினார்-உபசரித்தார், ஒருவர்-'அடியார்க்கு நல்லார்' என்ற ஒரு வேளாளர், மிச்சில்-உண்ட மிச்சத்தை, மிசைவான்-உண்பவனது, புலம்-வயலில்.

புலமேலர்ம் தீய்ந்தும் உலவாக் கோட்டையால் ஒருவர் விருந்தோம்பியது:—மதுரையில், சிவபக்தியிற் சிறந்த 'அடியார்க்கு நல்லார்' என்ற ஒருவர், சிவனடியார்கட்கு நாடோறும் அன்னம் அளித்தலே பெருங்கடமையாகக் கொண்டு, அவ் விருந்தினர்க்கு அளித்து மீந்ததை உண்டு, காலங் கழித்து வந்தார். இவரது நற்குணங்களை உலகறியச் செய்ய வேண்டி, சிவபிரான், இவரை வறுமைப் பிணிக் குள்ளாக்கினர். ஆக்கவே, அவர் கடன் வாங்கிச் செய்வன செய்து வந்தனர். கடன் கொடுப்பா ரற்றும் போகவே, அவர் வருந்தி, தருமசீலையாகிய தம் மனைவியுடன் சிவ சந்நிதி யடைந்து "ஐயோ! அடியார் பூஜை தடை படுகின்றதே! யாது செய்வோம்!" எனக் கதறி இறக்கத் துணிந்த பொழுது, சிவபெருமான் அசரீரியாய் "வேண்டாம்! வேண்டாம்! எடுக்குந் தோறும் குறையாத 'உலவாக் கோட்டை'யாகிய நெல் தந்தோம்" என்று அருளினர். உடனே அவர் அக மகிழ்ந்து மனைவியுடன் வீடு திரும்பிக் கடவுள் அருளிய நெற் கோட்டையைக் கண்டு வியந்து, யாவர்க்கும் விருந்தளித்து உவந்து, முடிவில் சிவ பத முற்றனர்" என்பதே.

> புன்புறத் தம்மிற் புகுவேடற் கீந்துடலை
> மன்புலவர் நாடுசென்ற வள்ளுவரே!—என்பெருமை!
> செல்விருந்(து) ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
> நல்விருந்து வானத் தவர்க்கு. (அ)

8



(அ-ம் முதலியன):—புல்—அற்பமான, இல் – வீடு, மன்—பெருமை வாய்ந்த, புலவர் நாடு—தேவலோகம்.

புன் புற வேடனுக்கு உடலீந்து புலவர் நாடு சென்றது:—ஒருவனத்தில் ஒரு வேடன், கையிற் குருவியும், கூடும், கண்ணியும், தடி முதலான வேட்டைக் கருவிகளும் எடுத்துக் கொண்டு திரியும் போது, அசநியிற் பெரு மழை வந்து இருட்டிக் கொண்டு பிரளய காலம் போற் காற்றெ

ழும்பியது. அப்போது அவ் வனசரன் கெக்கல் எடுத்து,மரத்தின் சார்பில் நின்று, "பகவானே! இவ்வேளையில் உன்னைவிட வேறொருவரும் காப்பாற்றுவார் இல்லை" என ஏங்கி நின்றான். அவ்வேளை, அம்மர மீதிருக்கும் புறா, தன் பெட்டை வரவில்லை யென்று விசனத்துடன், "இன்று என் நாயகி வரவில்லை. அவளை யாராயினும் பிடித்தார்களோ, என்னவோ? அவளில்லாமல் இல்லெங்கும் பாழாகத் தோற்றுகிறது. மனையாளில்லா வீடு சுடுகாடு போன்றுளது. கற்பும், கணவன் இன்புறும் வகைச் செயலுமுள்ள இல்லாளை யுடையான் எவனோ, அவனே பாக்கியவான்" என்று புலம்பிற்று. அதுகேட்டு,வேடனது கைக் கூட்டில் அகப்பட்ட பெண்புறா, துக்கித்து, "முற் பிறப்பில் தீவினை செய்தவர்களுக்கும் பல வகைப்பட்ட தளையும், சிறையும், நோயும், வறுமையும் சம்பவிக்கின்றன. அஃதிருக்கட்டும். எச்சமயத்தில் எது நேரிடுமோ, அஃதெப்போதும் பிசகுகிறதில்லை" என்று சொல்லித் தன் பதியைநோக்கி, "பிராண நாதா! இன்று நம் வீட்டுக்கு வந்த இவ் வேடனுக்குக் குளிர் முதலிய துன்பம் நீக்கி, உதவி செய்யவேண்டும். வந்த விருந்தை ஓம்பாவிட்டால், விருந்தினன், தன் பாவத்தை இல்வாழ்வானுக்குக் கொடுத்து, அவனது புண்ணியத்தைக் கொண்டுபோகிறான். ஆதலால், 'இவன் நம்முடைய பெண்டிரைப் பிடித்தான்' என்னும் துக்கத்தை மனதில் வையாமல், இவனுக்கு இயன்ற மாத்திரம் பூஜிக்கவேண்டும்" என வேண்டியது. பெண்புறாவின் வாக்கியத்தைக் கேட்டு, ஆண்புறா, "வேடா! உன் வரவு நல்வரவாகுக. நீ மனதிற் சிறிதும் ஐயமில்லாமல், இதை உன் வீடாக நினைத்து வேண்டுவதைக்கேள்" என, வில்லி, "கபோதமே! என் குளிரைப் போக்கடி" என வேண்டினான். கபோதம், காட்டில் இருந்து ஒருகொள்ளி எடுத்துக் கொண்டுவந்து சருகுகள்மேல் வைத்து மூட்டி, வேடனைப்பார்த்து, "நெருப்பு மூண்டெரிகிறது. இதில் குளிர்காய். முன் தீவினையால் நான் பறவையாயிருப்பதால் என்னண்டை உன் பசிக்கேற்ற பதார்த்த மில்லை. அநேக துன்பங்கட்கு இடமாயும் பரோபகாரம் ஆகாமலும் இருக்கிற இச் சரீரத்தை வைத்துக் கொண்டிருந்து பல னென்னை? இதனால் நீ உன் ஆத்மாவை ஸந்துஷ்டி செய்" என்று சொல்லிக்கொண்டே,பரோபகாரம் கருதி, மூண்டெரிகிற அனலில் ஆனந்தத்தோடு விழ, வேடன், "ஆ! ஆ!! என்

பொருட்டு இது உடலைத் துறந்தது.நான் தீயொழுக்க முள்ளவன்,வேறொ
ன்றின் தசையினால் ஜீவனம் பண்ணுகிறேன். பரோபகாரமும் தயையும்
சிறிதும் கனவிலும் அறியேன் ஆதலின் ஊனைத் தின்று ஊனைப் பெருக்
கிய பாவியாகிய நான் கோர நரகத்திற்குப் போவேன். இதை எனக்குத்
திருஷ்டாந்தமாய் இந்தப் புறா காண்பித்ததினால்,இதுமுதலாக பசிதாகம்
குளிர் வெயில் பொறுத்தல் இவற்றால்உடம்பை உலர்த்திப் பாவ மில்லாத
வனாகக் கடவேன்'' எனக்கூறி, பச்சாத்தாபத்துடனே தன் கூடு தடி
கண்ணி முதலியவற்றை முறித்தெறிந்து விட்டு, அப் பெண் புறாவை
விட்டு விட,அது, "உயிரினும்சி றந்த என் நாயகன், தருமத்தின் பொருட்டு
உடலைக் கொடுத்தான். கணவன் கருத்துக்கு ஒப்ப நடப்பவளே உத்தம
மனைவி. என் கணவனது உடலுணவு அதிதிக்குப்போதிய தன்று.நானும்
அவனுக்கு ஆகாரமானால் தான் அவனுக்குக் கால் வயிறாவது நிரம்பும்.''
என நினைத்துதானும் தீயில் விழுந்து இறந்தது.இறந்த உடனே அஃதொரு
திவ்ய ஸ்திரீயாய்க் கணவனோடு ஸ்வர்க்கத்திற்குப் போயிற்று. இவை
யாவும் கண்ட வேடன் இரக்கத்தால் பரிசுத்தனாய் நெருப்பில் தேகத்
தைப் போட்டுவிட்டு நற்கதியடைந்தான்'' என்பதே.

ஆவின் பால் ஈந்துவித்தி யாரணியர்க் காத்தோன்பின்
மாவேந்த னாய்வாழ்ந்தான் வள்ளுவரே!—நாவால்
இனைத்துணைத்(து) என்பதொன் றில்லை; விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன். (எ)

(அ-ம் முதலியன):—வித்யாரணியரைக் காத்தோன்—'புக்கணன்'
என்றஇடையன், இனைத் துணைத்து—இவ்வளவு அளவுடையது, விருந்தின்
துணைத்துணை—விருந்தினரின் பெருமைக்குத் தக்கபடி, வேள்வி—பஞ்ச
யக்ஞங்களில் ஒன்றாகிய மானிட யக்ஞத்தினது.

வித்யாரணியரைக் காத்தோன் வேந்தன் ஆனது:—மாயணன் என்

பவர்து குமாரரும், மாதவாசாரியார் என்றபெயருடையவரும், ஸம்ஸ்கிரு தத்தில் உள்ள சகல கலைகளிலும் வல்லவருமான இவர் எளிய குடும்பத்தில் சுமார் 550 வருடங்கட்கு முன் பிறந்தவர். தம் வறுமைப் பிணி நீங்கி இவ் புறுமாறு, இவர் இளமையிற் கற்றும் பயனுறாது, திருமகளையும் கலைமகளை யும் குறித்துத் தவஞ்செய்யக் காடு சென்றனர். அங்கு, அவர் பட்ட கஷ் டம் கணக்கில் அடங்காது. அவர் தாம் அநுபவிக்கும் கஷ்டங்களை, ஒரு நாள், அக்காட்டில் அரசனது மாடுகளை மேய்த்துத் திரிந்த புக்கணன் என் பவனிடம்கூறினர். அவன் மனமிரங்கி, அரசனுக்குச் சேரவேண்டிய பால் போக, அவமாக ஒழுகிப் போகும் பாலிற்சிறிது அவர்க்குக் கொடுத்து வந்



தான்; வித்யாரணியர் உணவுபற்றிய கவலையேயின்றித் தவமியற்றலானர். ஆயினும் நெடுங்காலமான பின், திருமகளும் கலைமகளும் புக்கணன் கன விற் றோன்றி 'மாதவர் கருத்து இப்பிறப்பில் நிறைவுறாது' என்று கூறிச் சென்றனர். இசசெய்தியைப் புக்கணன் வித்யாரணியர்க்கு அறிவித்தான். ஆயினும்அவர் விடாமுயற்சி யுடையோராய் மேன்மேலும் தவம் செய்தும் காரியசித்தி பெறாததால் சினந்து, தமது உபவீதத்தை அறுத்தெறிந்து துறவியாயினர். 'சந்யாஸம் மறுபிறப்பு' ஆகவே கலைமகளும் திருமகளும் மாதவர் முன் தோன்றி, "நீ வேண்டும் வரம் யாது?" எனன, அவர் சந்யா சியாகிய எனக்குத் திருமகள் அருள் தேவை இல்லை. கலைமகள் அருள் ஒன்றே வேண்டும். ஆயினும் என்னை அன்புடன் ஆதரித்த புக்கணனுக்குத் 'திருமகள் அருள்' வேண்டும்" எனக்கூறிப்பணிய,அவர்களும், 'அங்ஙனமே ஆகுக' என்று அருளி அந்தர்த்தானமாயினர். சின்னாட்கெல்லாம், ஹஸ்தி னபுர அரசன இறந்தான். அந்நகர மாந்தர் பட்டத்து யானையை அலங்க ரித்து அதன் கையிற் குடந்தந்து 'மன்னனொருவனைக் கண்டு கொணர்க' என விடுத்தனர். அது காட்டையணுகி, தூங்கிக்கொண்டிருந்த புக்கணன் தலைமீது நீரை அபிஷேகம்செய்து, பூமாலை சூட்டித் தூக்கிச சென்றது. புக்கணன் அரசனாயினன்." என்பதே.

[புக்கணன் அரசனானபிறகு மாதவாசாரியார் அவனதுமெய்யன்பைச்

சோதித்தறியக் கருதி அவனது அரண்மனை நோக்கிச் சென்றனர். இதற்குள் அவரது வருகையை ஒற்றர் மூலமறிந்த அரசன், பயபக்தி விசுவாசத்துடன் அவரை எதிர்கொண்டு சென்று உபசரித்தான் அதுமுதல் அவரைத் தன்னிடமே வைத்துக்கொண்டு அவரது யோசனைக் கிணங்கவே புக்கண்ணன் சகலகாரியமும் நடத்தி வந்தான். இப் புக்கணனுடைய விருப்பிற் கிணங்கியே வித்யாரண்யர், பல நூல்கட்கு வியாக்கியானம் எழுதியது என்க. வேதம், உபநிஷதம், சூதசங்கிதை முதலியவை இவரது வியாக்கியானம் பெற்றவைகளே. இவர்செய்த சங்கரவிலாசம் 40,000 செய்யுளுடையது. இம் மாதவாசாரியாது தீக்ஷாநாமம் தான் வித்யாரணியர் என்பது.

> *பன்னகர்தா மேயுண்பான் ஓம்பிப் பறவைகொணர்*
> *மன்னமிழ்தம் முன்னிழந்தார் வள்ளுவரே!—என்னே?*
>
> *பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி*
> *வேள்வித் தலைப்படா தார்.* (அ)

(அ-ம் முதலியன):—பன்னகர் - பாம்புகள், உண்பான்-உண்ணும் பொருட்டு, பறவை-கருடன், கொணர்-கொண்டுவந்த, மன் அமிழ்தம்-பெருமைதங்கிய தேவாமிர்தம், பரிந்து-விரும்பி, ஓம்பி-பாதுகாத்து,



**பறவை கொணர்ந்த அமுதத்தைப் பன்னகர் இழந்தது:**—நாகங்களைப் பெற்ற கத்ருவும், அருணன் கருடன் முதலியோரைப் பெற்ற விநதையும், திருப்பாற் கடற் கரையிலே உசசைச்சிரவத்தைக் கண்டு விரோதார்த்தமாக சம்பாஷித்ததும், அச சம்பாஷணையின் பயனாக விநதை கத்ருவுக்கு அடிமையானதும் வள்ளுவர் நேரிசை 8-ஆவது அதிகாரம் 10-ஆவது செய்யுளை விளக்கக் கூறிய கதையால் அறியலாகும். அதற்குமேல் நிகழ்ந்தவை வருமாறு:—விநதை தன் சிறை நீங்கும் வழி கூறுமாறு கத்ருவை வேண்ட, அவன், "தேவலோகத்திலுள்ள அமுத கலசத்தைக் கொண்டு வந்து கொடுப்பின் நீ சிறை நீங்குவை" என்றான். பிறகு விநதை காசிப ரு

னால் கருடனை மகனாகப் பெற்று அவனுக்குத் தன் விருப்பை புணர்த்தி னள். அவன் தக்ஷணமே தேவலோகம் சென்று, அதனைக் கொணர்ந்து தன் தாய் கட்டளையிட்டபடியே கத்ருவிடம் சேர்ப்பித்து தனதன்னை சிறைநீக்கினன். பிறகு, கத்ரு அவ் அமுதத்தை நாகங்கட்கூட்ட விரும்பி அவற்றை நீராடி வரும்படி சொல்லி யனுப்பினள். அவை அவ் வாறே வந்த பொழுது அமுதகலசம் உருண்டு கிடந்தது. அமிர்தம் சிந்திக்கிடந்த தருப்பைப் பிரிமனையைப் பாம்புகள் நக்கின. நக்கவே அவற்றின் நாக்குகள் இரண்டாகப் பிளவுற்றன என்பதே.

என்ஆம் பொருள்பெற்றும்? ஔவைக் கிடாள்சோறு
மன்னுமொரு வன்மனையாள் வள்ளுவரே!—உன்னில்
உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை; மடவார்கண உண்டு.

(அ-ம் முதலியன):—உடைமையுள-பொருளுடையரா யிருக்குங்காலத்து, இன்மை-வறுமையாவது, விருந்தோம்பல் ஓம்பா-அதிதி பூஜையை இகழும். மடமை—பேதமையாம், மடவார்கல்-(அது புருஷர்களிடத்திற் பெரும்பாலும் இராது) அறிவிலாப் பெண்டிரிடத்து, உண்டு-காணப்படுவதாகும், ['மடவார்கண்' என்பதற்கு "விருந்தோம்பலை இகழ்வது பேதமை என்ற உண்மையை அறியாதவரிடத்தில்" என்று முன்னோர் பொருள் கூறியிருப்ப, சந்தர்ப்பத்திற் கேற்றபடி, 'அறியாப் பெண்டிரிடம்' எனப் பொருள் கூறப்பட்டதாகும். 'ஒருவன் மனையாள்' என்பதை "ஒரு வன்மனையாள்" என்று பிரித்தும் பொருள் கூறலாகும்.]

ஒருவன் மனையாள் ஔவைக்குச் சோறிடாமை:—'உப்புக்கும் பாடி, புளிக்கும் ஒரு கவிதை ஒப்புவிக்கும்' உளத்தளாகிய ஔவை, ஒருநாள் பசி தாகத்தாற் களைத்து, உணவு வேண்டி, வீடுவீடாக நுழைந்து வருங்கால், ஒரு வீட்டுத் திண்ணையில் இல்லறத்தான் ஒருவன் இருக்கக் கண்டு, தன் வாய்திறந்து இரக்கத் துணியாளாய், தன்மனக்குறிப்பை முகத்தால் தெரி

வித்தனள். அஃதுணர்ந்த விட்டோன் மனக்களித்து கொடியளாகிய தனது மனைவியின் சம்மதத்தைப் பெற்று, விருந்தோம்புமாறு, அவனுக்கு வேண்டிய பணிவிடைகள் பலசெய்தான். 'விருந்தோம்ப வேண்டுமெனப் புருஷன் விளம்பியவுடன், மனைவிசினந்து, கணவனைச் சிதைத்தனள். இவற்றைக் கண்ட ஔவை அங்கு உண்ண மனம் பொருது, வேறு வீடு சென்று எளியோன் ஒருவன் அன்புடன் இட்ட அற்ப போஜனமுண்டு, பசியாறி மகிழ்ந்தனள். அவ் அறிவிலாப் பெண்டை அவளது கணவன் உபசரித்த விதமும், அதன் மேல் அவன் செய்ததும்,

> "இருந்து முகந்திருத்தி ஈரோடு பேன்வாங்கி
> விருந்துவந்த தென்று விளம்ப—வருந்திமிக
> ஆடினள் பாடினள் அடித்தாள் பழமுறத்தால்
> சாடினள் ஓடோடத் தான்."

என்ற வெண்பாவினால் அறிக.

> பண்டறிவால் வந்தொரந்தான் பாஞ்சாலன் முன்மறைதேர்
> வண்டார்த் துரோணனும் வள்ளுவரே!—கொண்டபின்
> மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
> நோக்கக் குழையும் விருந்து. (௰)

(அ-ம் முதலியன):—பண்டு அறிவால்—முன்பு அறிந்திருந்த காரணத்தால், பாஞ்சாலன்—துருபதன், வண்தார் துரோணன்—வளப்பம்பொருந்திய தாமரை மாலையணிந்த துரோணாசாரியன், கொண்டபின்—செடியினின்றும் பிடுங்கிக் கைக்கொண்ட பிற்பாடு, மோப்ப—மோந்து பார்த்த சிறிதுமே, குழையும்—வாடும், அனிச்சம்—அனிசசம் என்னும் மலர், திரிந்து—மாறி, விருந்து—புதிதாக வந்தவன்.

துரோணன் பாஞ்சாலன் முன் வந்து நோந்தமை:—துரோணரும, பாஞ்சால ராஜ குமாரனை துருபதனும ஒரே ஆசிரியனிடம் வில் வித்தை கற்று வருகையில், துரோணர் சகல வித்தைகளிலும் சிறந்து ஆசாரிய ஸ்தானத்திலிருந்து துருபதனுக்குத் தெரியாத யாவும் கற்றுத் தந்தார்.

தான் பெற்ற பேருதவிக்கு மிக மகிழ்ந்த துருபதன், ஒருநாள் துரோண
ரைநோக்கி, "ஐய! நீரே எனது பரமாசிரியர். எனக்கு அரசுரிமை கிடை
க்குமாயின், குரு தக்ஷிணையாக நான் என் அரசிற் செம்பாதி அளித்தே
தீர்வேன்." என்ன, துரோணர், "என்னிடத்தில் உனக்கு இப்போதுள்ள
அன்பு என்றும் மாறாதிருப்பதாக. அஃதொன்றிருந்தால் எனக்கும் உனக்
கும் ஒரு குறைவும் இல்லை" என்றனர். சிறிது காலத்திற்கெல்லாம் துருபதன்



பாஞ்சால மன்னனாயினன். அச்சமயம் துரோணரும் அவரது மனைவியா
கிய கிருபியும், ஈசுவரானுக்ரகத்தினால் குதிரை வயிற்றிற் றோன்றிய அசு
வத்தாமன் எனும் குழந்தையைப்பெறும் பாக்கியமுற்றனர். அம்மகவுக்குப்
பாலின்றி இருவரும் வருந்தியபோது, கிருபியின் நல்லாலோசனைக்கிணங்
கித் துரோணர், பாற்பசு ஒன்று யாசிக்கத் துருபதனிடம் சென்றார். துருப
தனுக்குப் பழைய நினைவு வந்து விட்டது. பாதிராஜ்யம் பெறவே துரோ
ணர் வந்தாரெனக் கருதினான். "அறம் நிரம்பிய அருளுடை அருந்தவர்க்
கேனும், பெறலரும் திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாம்" அன்றோ?
"ஐயோ! என் செய்வது?" என நினைத்து, முகம் வேறுபட்டவனாய், ஒன்று
மே தெரியாதவன் போல் துரோணரை நோக்கி, "ஐய! நீர் யார்? எங்கு
வந்தீர்? உமக்கு எந்த ஊர்?" என்ன, துரோணர் கள்ளங் கபடு அறியாது,
"வெகு நாளாயினமையின் நம்மை இவன் அடையாளம் கண்டு கொள்ள
வில்லை போலும்!" என எண்ணி, "அரசே! நான் உனது ஆசானாகிய துரோ
ணன் அல்லனோ?" என்ன, துருபதன், "நீரா எனது ஆசானாவது?
ஒருபோதுமில்லை. ஏதோ மறந்து உளறுகிறீர்" என்றான். துரோணர் அதி
சயித்து "ஐய! நீயும் யானும் ஒரு ஆசிரியன்பாற் கற்றதேனும் ஞாபகமில்
லையோ? என்ன, அவன் நகைத்துப் "போம் போம் பித்தரே. முதலில்
எனது ஆசிரியா என்றீர். பிறகு என்னோடு கற்றவன் என்றீர். உமக்குப்
புத்தி ஸ்வாதீனமில்லை போலும்" எனக் கடிந்து கூற, துரோணர், தம்மை
யே நொந்தவராய் "வேந்தே! நீ என் உதவி பெற்று மகிழ்ந்து, உனக்கு அர

சுரிமை கிடைத்தவுடன் பாதி ராஜ்யம் கொடுப்பதாக வாக்களித்ததும், அதற்குநான் அளித்த விடையுமேனும் ஞாபகத்தில் உளதா?" என வினவ, துருபதன் பெரிதும் வெகுண்டு, "நீர் பெரும் பொய்யர். போம் வெளியே" என்ன, துரோணர், "எனக்குப் பாதிராஜ்யம் வேண்டுவதில்லை. பால்மணமறா இப் பசுங் குழவி நிமித்தம் ஒருபாற்பசு வேண்டிப் பெறவே நின்பாலுற்றேன். அது தந்தாற் போதும்" என்ன, துருபதன் நகைத்து, "நீர் முன்னமேயே பசுக் கேட்டிருப்பின் ஒரு பசுவுக்கு ஐந்து பசு தந்திருப்பேன். நீர் பெரும் வஞ்சகரும் பொய்யருமாதலின் எதும் கொடேன் புறஞ்செல்க" எனத் துரத்த, துரோணர் புழுங்கிய மனத்தராய், துருபதனை நோக்கி, "யானோ பொய்யன்? அடாத பொய் கூறி என்னை அவமதித்த நினக்குத் தக்கவாறு புத்தி வரச் செய்கிறேன். நீ சொல்லிய பாதிராஜ்யத்துடன் முழுராஜ்யமும் பெறுகிறேன்" எனச் சினந்து கூறி வருத்தத்துடன் அஸ்தினபுரம் சென்றனர்" என்பதே.

[அஸ்தினபுரம் சென்றவர் பாண்டவ கௌரவர்க்கு வில்லாசிரியராகி அர்ச்சுனனைப் பாஞ்சால நாட்டிற்கு அனுப்பித் தம்மை அவமதித்த துருபதனைத் தேர்க்காலில் கட்டிவரச்செய்து, துருபதனைநோக்கி "இப்பொழுது



முழு ராஜ்யமும் என்னது. உன் உயிரும் என்னது. அற்பப் புத்தியுள்ள உனக்கு இவ் அவமானமே போதும். உனக்கு ராஜ்யமும் உயிர்ப் பிச்சையும் தந்தேன். ஓடு" என்று கூறிய விபரமும் பிறவும் பாரதக் கதையினின்றும் அறிக.]

---

## பத்தாவது அதிகாரம்

---

## இனியவை கூறல்.



தன்நாட்டிற் செமபாதி சாபமுனிக்(கு) ஈவலென்றோர்
மன்நாட்டல இனசொல்லோ? வள்ளுவரே!—முன் நாட்டின்
இன்சொலால ஈரம் அளைஇப் படிறிலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல் (க)

(அ—ம் முதலியன)—செம்பாதி-சரிபாதி, சர்மமுனிக்கு- சமாதானமே விரும்பும துரோணனுக்கு, ஈவல்-கொடுப்பேன்,மன்-துருபத மன்னன், நாட்டல்-உறுதிமொழிகூறினமை, முன்-சிறப்பாக, நாட்டின்-சொல்லுமிடத்து, ஈரம்-அன்பு(டன்), அளைஇ-கலந்து,படிறுஇலவாம்-வஞ்சகம் இல்லாதனவாகிய,செம்பொருள்-அறததினை, கண்டார்-அறிந்தவர்களது. 'இன்சொலால்' என்பதில் 'ஆல்' என்பது அசை.

பாதிராஜ்யம் தருவதாகத துரோணருக்குத் துருபதன் கூறிய வரலாற்றை "வள்ளுவர் நேரிசை,ஒன்பதாவது அதிகாரம்,10-வது செய்யுளை விளக்கக் கூறிய விஷயம கொண்டு அறிக.

முன்(பு)அரா வான்இன்சொல் மொழிந்து களப்பலிக்கு
மன்பால் உடன்பட்டான் வள்ளுவரே!—இன்பால்
அகன்அமர்ந்து ஈதலின நன்றே முகனமர்ந்து
இன்சொலன் ஆகப் பெறின்.

(அ-ம் முதலியன):-மன்பால்-துர்யோதனமன்னனிடம்,இன்பால்-இன்பமுடன், அகன்அமர்ந்து-மனமகிழ்ந்து,முகன் அமர்ந்து-முகமலர்ந்து.

அராவான் இன்சொல் மொழிந்து துரியோதனன்பால் களப்பலிக்கு உடன்பட்டது:—பாரதயுத்தம் ஆரம்பிக்குமுன் பீஷ்மர் துர்யோதனனை நோக்கி, "நீ காலந்தாழாது சில முக்கிய காரியங்கள் செய்யவேண்



டும். 'தாழ்ச்செய்வது நல்லோர் செய்யார்' ஆதலின்-ஒரு நன்முகூர்த்தத்தில் யுத்தம தொடங்க வேண்டும். அன்றியும், எதிர் சோமக்காரனும், பலசாலியுமான ஒருவனைப் பலிகொடுத்துத்தீரவேண்டும். இவவிரண்டும் செய்தால்

வெற்றி மமைதே.'' என்ன, துரியோதனன், நன்னுள் குறிக்கப் புரோகி தரை யழைத்து வரவும், எதிர் ரோமக்காரர் யாரென விசாரித்து வரவும், தனது வேலைக்காரர்களுக்குக் கட்டளையிட்டான் அப்போது பீஷ்மர் அவனைத் தடுத்து "நன்னுள் குறிக்கப் போதிய வன்மை புரோகிதர்களுக்கு இராது. சகாதேவன் ஒருவனே இதுசெய்ய வல்லவன் எதிர் ரோமக்காரர்கள் அர்ஜுனன், கிருஷ்ணன், அரவான் ஆகிய மூவர்களே. பஞ்சபாண்டவர்களும் நம் பகைவர்களாதலின், அர்ஜுனனைப் பற்றிக் களபலி சம்பந்தமாக நாம நினைப்பது தவறு. கிருஷ்ணனோ பலருமறிய பாண்டவர் சகாயனானவன். ஆதலின் அவனும் நமக்குப் பயனற்றவனே. இவர்கள் போக, அரவான் ஒருவன்தான் உளன். ஆதலின் நீ உடனே சகாதேவனிடம் சென்று, தாமபுகான் தலைஉருள ஓர் நக்ஷத்திரன் குறித்துத் தருமாறும், அரவானிடம் சென்று, களப்பலிக்கு உடன்படுமாறும், வேண்டி வருக.'' என்றார். துரியோதனன் பாட்டனை நோக்கி, 'நல்ல யோசனை சொன்னீர்கள்!. பாண்டவர்கள் நம்பகைவராயின், சகாதேவனும் அவர்களில் ஒருவனல்லனோ? ஒளியப்போய, தலையாரி வீட்டிலா ஒளிகிறது! மானங்கெட்டு நான் அவனைக் கேட்டாலும், அவன் உண்மை உரைப்பானோ? நாம் அபஜயமுறற்கான நாளை அவன் குறித்துத் தந்து விட்டா லென்ன செய்கிறது? இது தான் போகட்டும் அரவான் அர்ஜுனன் மகனன்றோ? பகைவன் மகன் நமக்குப் பரிவு கூர்வானோ? பரிகாசத்திற்கிடமன்றோ?'' என்றான். பீஷ்மர் அவனது அறப் புத்திக்காக நகைத்து, "துரியோதனா! சகாதேவனும், அரவானும் நீ எண்ணுகிறபடி வஞ்சகர்களல்லர் சந்திர சூரியர் கதிமாறித் தெற்குவடக்காய்த் திரிந்தாலும் சகாதேவன் சத்தியம்தவறான். அரவான் யாக்கை நிலையாமையை முற்றுமுணர்ந்த பரமஞானி யாதலின், தன்னைப் பிறர்க்குப் பயன் படுத்த நற்சமயம் எதிர் பார்ப்பவன்.'' என்று இருவருடைய ஒப்புயர்வற்ற குணங்களையும்கூறி, அவனுடைய சந்தேகங்களைப்பல் வேறு விதமாகத் தீர்த்தார். அதுகேட்டு வணங்காமுடி மன்னன், ஓர் ருத்திர அன்னப்புள் மீதேறி, உபப்பிலாவியத்திற்குச் சென்று, சகாதேவனிருப்பிடம் சென்றான். அவனைக் கண்டதும், சகாதேவன் எழுந்து,

"அண்ணா! வருக! இவ்வகாலத்தில் இவ்வளவு தூரம்,—அதிலும் என்னிடம் வந்ததேது?" என்று வணங்கிக் கேட்க, துரியன், "தம்பி! உங்களுக்கும் நமக்கும் பகைநேரிட்டபடியால் படைகூட்டி விட்டோமன்றோ? நம்சேனையும் குருக்ஷேத்திரம் போய்ச் சேரவும், தருமபுத்திரர் தலையுருளும்படி நாங்கள் ஆயுதம் வைக்கவும், தக்க வேளை நாள் குறித்துத் தருமபடி வேண்டிக்





சொல்லவே நான் உன்னை நாடிவந்தேன். ஆசை வெட்கமறியா தன்றோ?" என்றான்.

சகாதேவன் அதுகேட்டு, "நல்லது அண்ணா" என்று சொல்லித் துரியோதனனது காலபலம் முதலியவற்றையும், ஜயாபஜயத்தையும் பன்முறை யோசித்து, "அண்ணா! வெற்றியில் உங்கட்கு விருப்பமுளதேல் நாளையன்றைக்கு வரும் பௌர்ணிமை யன்று இரவு ஒன்பது (9) நாழிகைக்குமேல் குருக்ஷேத்திரத்திற்குச் சேனைகளை அனுப்புங்கள். அப்போதே களபலியும் கொடுத்துப் பராசத்தியைப் பூஜித்து, ஆயுதமெடுப்பீர்களாயின், தருமபுத்திரர் தலை தப்பாது. இதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. பிறகு தெய்வ சித்தமெப்படியோ?" என்றுகூறி, உபசரித்து அனுப்பினான்.

சகாதேவனது விடுதியினின்றும் புறப்பட்ட துரியோதனன், அதிசீக்கிரத்தில் அராவான் விடுதி வந்து சேர்ந்தான். அவன் வந்த சமயம் அராவான் யாக்கை நிலையாமையைப் பற்றித் தன் சீடர்களுக்கு மகோபந்நியாசம் செய்து கொண்டிருந்த தருணமாயிருந்தது. மாசுணக் கொடியோன் நிகழ்ந்த யாவையும் ஓர் மறைவிடத்திருந்தே பார்த்தும் கேட்டுக் கொண்டுமிருந்தான். பிரசங்கமுடிவில், அராவான் "அநித்தியமாகிய சரீரம் பிறர் ஒருவர்க்குப் பயனுறுங்காலம் வந்தால் அதை முழுமனதுடனும் தியாகம் செய்துவிட வேண்டியதே விவேகிகளின் கடமை" எனக்கூறி வாய் மூடுமுன், துரியோதனன் அவன் முன் வந்து நின்றான். அராவான் வியப்புற்று, அவனை வணங்கி, "ராஜராஜேச! தாங்கள் இவ்வற்பனைநாடி இவ் அகா

லத்தில் வந்த காரணம்யாதோ? என்றுகேட்க, துரியோதனன் "க்ஷத்திரியப் பொருளுணர் சத்தியசீல! இங்குநீ பேசிக்கொண்டிருந்த விஷய சம்பந்த மாக உன்உதவி வேண்டவே இங்கு வநதேன். ஒருயிரைக் காக்கவே னும் உயிர்விடுதல் புண்ணியமென்று நீ சிறிது முன்கூறினை. ஒருயிரன்று. என்னுடைய 14 அக்ரோணியிற் பெரும்பானமை உய்யவேண்டி யிருக்கி றது. இங்ஙனம் உய்ய எதிர் ரோமக்காரர்களைப் பலியிட்டால்தான் முடியு மாம். உன்னையன்றி எனக்குஉபகாரம் செய்யக்கூடிய உத்தமர் எவருமிலர். வருகிற பௌர்ணிமையன்று 9 நாழிகைக்குமேல் யுத்தம் தொடங்குகின் றது. அசசமயம் நீயே களப்பலியாக உடன்படவேண்டும்" என்றான். அரா வான் அகமகிழ்வும், முகமலர்ச்சியுமுற்று, "இவ்வளவுதானா? என் பாக்கி யமே பாக்கியம். தந்தாய்! இசசரீரம் அநித்தியம். நீர் குறிப்பிடும் தினம் வரும்வரை நானுயிரோ டிருப்பேனாயின் நானவசியம் உமது விருப்பை ஈடேற்றுவேன்" என்றான்.

அராவான் இன்சொல் மொழிந்ததே இங்குக் கூறப்படவேண் டிய விஷயம். ஆயினும், சகாதேவனைப் பற்றியும் இங்குக்கூறியதற்கு ஒரு



காரணம் உண்டு அஃதென்னவெனில், இனிப் பிறிதோரிடத்தில் நமது ஆசிரியர் சகாதேவனது வரலாறு கூறுகின்றார். அசசமயம் மீண்டும் ஆரம் பத்திலிருந்து, இப்பொழுது கூறும் விஷயங்களிற் பெரும்பாகம் கூறும விருக்கும் பொருட்டே]

*மாதவரைச் சூதால் வருத்தி விருந்தளித்தான்*
*வாதாவி. இஃ(து) அறமோ? வள்ளுவரே!—தீதே*
*முகத்தால் அமர்ந்(து) இனிது நோக்கி அகத்தானும்*
*இன்சொல் இனதே அறம்* (௩)

(அ—ம் முதலியன):-வருத்தி-வரவழைத்து, முகத்தால் அமர்ந்து-முக மலர்ச்சியுடன், அகத்தான் ஆம்—மனத்தடனாகிய

மர்தவரைச் சூதால் வருத்தி வாதாவி விருந்தளித்தது:—சூரபன்மன் தங்கையாகிய அஜமுகி என்பாள் துருவாசமுனிவரை வலியக்கூடி இரு பிள்ளைகளைப் பெற்றனள். இவர்களில் இளையோன் வாதாவி. மூத்தோன் இல்வலன். இல்வலன் முனிவனாகவும், வாதாவி ஆடாகவும் உருக்கொண்டு முனிவர்களை விருந்துக்கு அழைப்பார்களாம். வந்த விருந்தினர்க்கு இல்வலன் ஆட்டுருக்கொண்ட தன் தம்பியைக் கறியாக்கி புண்பிப்பான். பிறகு அவன் தன் சகோதரனைப் பேர்கூவி அழைத்தலும், ஆட்டுருவுடன், உண்டோரது வயிற்றைக் கிழித்துக்கொண்டு அவன் வெளிவருவன். இவ்விதம் அவ்விருவரும் முனிவர் பலரைக்கொன்று மகிழ்வெய்தி வருகையில், ஒரு நாள் அகஸ்திய முனிவரை இவர்கள் கண்டு, வழக்கப்படி விருந்துக்கழைத்தனர். அகஸ்தியரும் இணங்கி உணவருந்தியபின், இல்வலன் வழக்கப்படி வாதாவியை அழைக்க, அவன் ஆட்டுருவேற்று வயிற்றைக் கிழித்து வெளிவர யத்தனிப்பதை அகஸ்தியர் உணர்ந்து, தம் வயிற்றைத் தடவித் தம் சக்தி விளைய அவனை ஜீரணம் செய்து விட்டனர்.

> நாடு கரந்துறையும் நாளும், நடுவன் சேய்
> வாடா(து) இனி(து) உறைந்தான் வள்ளுவரே!—கேடுற்றுத்
> துன்புறாஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
> இன்புறாஉம் இன்சொல் லவர்க்கு. (௪)

(அ-ம் முதலியன):— கரந்து-மறைந்து, நடுவன்சேய்-தரும புத்திரன், துன்பு உறாஉம்-துன்பத்தை மிகுவிக்கும், இன்சோல்லினதே-இனிய சொற்களை சொல்லுதலின் இடத்ததேயாம், துவ்வாமை-வறுமை.

☞ தருமபுத்திரன் அக்ஞாத வாசம் செய்த காலயிலும் வறுமையால் வருந்தாது காலங்கழித்தது மகாபாரதக் கதையால் பிரசித்தம்.

"ஏழை ஒருவன் 'இராமா!' என அழைப்ப
வாழி அப்பா!" என்றான்மால் வள்ளுவரே!—சூழின்
பணிவுடையன இன்சொலன் ஆதல்ஒருவற்(கு)
அணி அல்ல மற்றுப் பிற. (ரு)

(அ-ம் முதலியன) —மால்-மகாவிஷ்ணு(வின் திரு அவதாரமாகிய ஸ்ரீராமன்). சூழின்—ஆராய்ந்து நோக்கின், பணிவுடையன்—பெரியோர்களிடம் வணக்கமுள்ளவனாய், அணி—சிறப்பு (வாழி—அசை)

'இராமா'' என்று அழைத்தவனை ஸ்ரீராமன் 'அப்பா'' என்றழைத்தது:—ஸ்ரீராமனிடம் பேரன்பு வாய்ந்த ஓர் ஏழை இடையன், அவர் வனவாசம் முடிந்து சீதையுடன் மீண்டபோது அயோத்தியுற்று மகுடாபிஷேகம் செய்து கொள்ளப்போகிற சுபசெய்தி கேட்டதும், அரைக்கணமும் தரியாது, அரமனைக்கு ஓடினன். ஓடினவன், எல்லாரையும் தாண்டிச்சென்று கண்ணும் கண்ணீருமாய் ஸ்ரீராமனைக் கட்டிக் கொண்டு "அடே ராமா! கண்ணே! நீ போனதுகூடத் தெரியாதே உன்னைக் கண்டேனே!—" என்று மேல் எதும் பேசமுடியாமல் விம்மிவிம்மி அழுதான். ஸ்ரீராமரும் "அப்பா! அழாதேயுங்கள். அழாதேயுங்கள் அப்பா!" என்று அவனுக்குத் தேறுதல் கூறி அவனைக் கட்டிக் கொண்டு அவனிலும் அதிகமாய் அழ ஆரம்பித்தனர். அழவே, "இப்படியும் இரண்டு பைத்தியக்காரர்கள் உண்டா? கேவலம், தரித்திர இடையன் "அடா ராமா" என்னச், சக்ரவர்த்தி திருமகனார், "அப்பா!" என்று அழைத்து அவனுக்குத் தேறுதலும் சொல்லுகிறாரே! இஃதென்ன விபரீதம்!" என்று பலர் எண்ணித் தியங்கி நின்றனர். சூழ்ந்திருந்த மந்திரிகளுக்கும், அரசக வானர வீரர்களுக்கும் ஒன்றும் விளங்கவில்லை. இருவரும் அழுது ஓய்ந்ததும் ஸ்ரீராமன் இடையனுக்கு ஒரு தக்க ஆசனம் அளித்து, சபையை நோக்கி, "நல்லீர்! இவ்வுலகில், 'ராமத்தியானம்' செய்யுங்கால் என் பெயரை "ராம! ராம!" என்று எவரும் தம் மனதுக்குள் சொல்லிக் கொள்வாரேயன்றி, என்னை—அதுவும் என்காது கேட்க-என் பெயர் சொல்லி அழையார் அவ்வனம் பெயரிட்டழைப்பவர்

என் உடமைத தநதையார ஒருவரே. அவரைப் பிரிநததுமுதல், இவரே என்னைப பெயர கூறி அழைததவராதலின இவரே என் இறந்த தாதை, சந்தேகம் என்ன? இவர என்னிடததுத தந்தையிற் றூழாப் பேரன்புவாய்ந் தவர் என்பதை அவரது கண்ணீரும, வாக்கும், மனமும், செய்கையும் காட்ட வில்லையா?. உள்ளபடியே நான் அழும்போதும் அவரைத் தந்தை யினும் வேருக எண்ணவே யிலலை'' என்றூர்.

## இனியவைகூறல்.

69

சூதமுனி என்றும் துயர்நீங்கு சௌநாதியர்க்குச் (? marginal: நாணடீன்)
மாதவர்க்குச் சொல்லியதென்? வள்ளுவனார் (? marginal: ஓதிங்கால)
''அல்லவை தேய அறம்பெருகும், நல்லவை
நாடி இனிய சொலின.'' (௬)

(அ-ம் முதலியன)—சூதமுனி-வியாசா மாணவராகிய சூதபுராணிகர், உள்-சிறநதகின்ற, மாதவர்க்கு-நைமிசாரணிய வாசிகளான சௌநகாதிமுனிவர்களுககு, அல்லவை-பாபஙகள், தேய-குறையவே, நல்லவை-பொருளால் பிறர்ககுநன்மைதரும் சொற்களை, நாடி-மனததால் ஆராய்ந்து, இனிய-இனியமொழிகளை

சூதமுனி கூறியவை, கடைசி இரண்டு வரிகளுமாகிய வள்ளுவரது திருககுறட் கருததேயாகும்.

செய்யாது செய்தான்போல் தோற்றுதிருக்கோளென்றூன்
வையத் தறன்மைந்தன் வள்ளுவரே!—மெய்யே
நயன்ஈன்று நன்றி பயக்கும், பயன்ஈன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல் (எ)

(அ-ம் முதலியன):—செய்யாது - செய்யத் தகாத காரியங்களை, திருக்கோள்-தெய்வததாலுறற இடையூறு. அறன் மைந்தன்-தர்மபுத்திரன்; நயன் ஈன்று-(இம்மைககு) நீதியும் பயந்து, நன்றி-(மறுமைக்கு) அறமும்,

பயன் ஈன்று—பொருளால் நலம் தந்து, பண்பின்—இனிமைக் குணத்தி னின்று, தலைப்பிரியா—நீங்காத.

அறன் மைந்தன் தோற்று 'திருக்கோள' எனத் தேறியது:—பாண்டவரது பெருமையையும் சம்பத்தையும் கீர்த்தியையும் காணச் சகியாத துரியோதனுதியர் அவர்களை யுத்தத்தில் ஜயிக்க முடியாதென நன்குணர்ந்து, தன் மாமனும் காந்தாரமன்னனுமாகிய சகுனியின் உதவி பெற்று, அவர்களைச் சூதினால் வெல்லத் தீர்மானித்து, அதற்காவனவும் புரிந்தனர். இருதிறத்தாரும் சூதாடியபோது தருமபுத்திரர் சகுனியின் சூதால் தமக்குரிய நாடு நகரம் பொருள் வாகனுதி யாவும் இழந்தனர்.இதனுடனும் நில்லாது,அவர், சகுனியின் நயவஞ்சக மொழிக் குட்பட்டுத் தம்மையும், தம்பிமாரையும், மனைவி துரோபதியையும் பந்தயமாக வைத்துச் சூதாடி அவர்களையும் இழந்தனர். துரியோதனுதியர் சபையில் தம்மை அவமானப் படுத்தித் துரோபதையையும் மானபங்கம் செய்யப் புகுந்த காலத்தும், தருமர், தருமத்தையும் சத்தியத்தையும் பெரிதா யெண்ணி, தம்பிமார்களது கோபமொழிகளையும் சகித்து, "யாவும் ஈசுவர சங்கற்பமே" என மனந்தேறி யிருந்தார்.

## 70 வள்ளுவர் நேரிசை.

குற்றமு— யார்யார்? கூறு''கெனக் குந்திமகன்
ம 'யாரும் இல்' என்றான் வள்ளுவரே!—முற்றும்
சிறுமையுள் நீங்கிய இன்சொல்,மறுமையும்
இம்மையும் இன்பம் தரும். (அ)

(அ—ம் முதலியன):—கூறுக என—(பீஷ்மர் துரோணர்முதலியோர்) சொல்லுக என, குந்தி மைந்தன்—தருமபுத்திரன், சிறுமையுள்—(பொருளால்) துன்பம் செய்வதில், (மற்று—அசை)

தருமன் குற்ற முடையார் யாரும் இல்லை என்றது:—தரும புத்திரன் துர்யோதனன் ஆகிய இருவரது குறைகுணங்களையும் உய்த்தறிந்து உலகத்

தார்க்குக் காட்டவிரும்பிய பீஷ்மர் துரோணர் முதலிய பெரியோர்கள், அவ்விருவரையும் ஒருநாள் வரவழைத்தனர். தருமனை நோக்கி "உனக்கு 3மாதத் தவணை தருகிறோம். அதற்குள், நீ மனமாரத் 'தீயோர்கள்' என்று கண்டுகொண்ட பெயர்கள் இத்தனை எனக்குறித்து எமக்கு அறிவிக்க வேண்டும்" என்றும், துர்யோதனனை நோக்கி "உனக்கும் 3-மாதத் தவணை தருகிறோம். அதற்குள் நீ உன் மனமார 'நல்லோர்கள் எனக் கண்டுகொண்ட பேர்கள் இத்தனை எனக்குறிக்க வேண்டு' மென்றும் கட்டளை யிட்டனர். அவர்களும் அங்ஙனம் செய்வதாக ஒப்புக்கொண்டு தமக்கிட்ட தொழிலிற் புக்கனர். குறித்த தவணை முடிந்ததும், தருமன், 'தீயன், ஒருவனேனும் உலகில் இல்லை' யென்றான். துரியோதனன் 'உலகில்நல்லனே ஒருவரும் இல்லை என்றான். இதனால் இருவரது குணமும் நன்கு வெளிப்பட்டன'.

> எல்லாரும் தற்புகழ இன்புற்றோன், நிந்தித்தான்
> வல்லான் விதுரனைமுன் வள்ளுவரே!—சொல்லுள்
> இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
> வன்சொல் வழங்கு வது? (கூ)

(அ—ம் முதலியன):—தற்புகழ-தன்னைப் புகழக் கண்டு, இன்புற்றோன்-மகிழ்வுற்ற துர்யோதனன், வல்லான்-வலிமை பொருந்தியவனை, எவன்கொலோ-ஏனோ, வழங்குவது-சொல்வது.

எவரும் தன்னைப் புகழ்ந்துழி இன்புற்ற துர்யோதனன் விதுரனை நிந்தித்தது:—திரிதராஷ்ட்ரனது மந்திரியும், அம்பிகை யென்பாளின் தோழியிடம் வியாஸமுனிவர்க்குப் பிறந்தவனுமான விதுரன், பாண்டவ கௌரவரால் தந்தையாகவே மதிக்கப் பெற்றவன். துர்யோதனுதியர், பாண்டவர்கட்குப் பலவித இடுக்கண் புரிய எத்தனிக்கும் போதெல்லாம் அவர்களைக் கண்டித்து நல்வழிப் படுத்த முயன்ற தர்ம சீலன் இவன். சூதாடத் துர்யோதனுதியர் சூழ்சசி செய்கையில் பாண்டவர்க்காகப் பரிந்து பேசித்

துரியோதனனது வசை மொழி பெற்ற இவன், ஸ்ரீகிருஷ்ணன் பாண்டவ தூதனாகத் துர்யோதனனிடம் சென்றிருந்த சமயத்தில் அவனுக்கு விருந்து செய்து உபசரித்தனன். இதனால் துர்யோதனன் சினந்து

வன்பி னால்அவனி யௌவளன் றனது
மனையில் உண்டியை மறுத்தவன்
தன்ப தாகினிபொ டினித ருந்தும்வகை
தன்னில் இன்னமு திபற்றினான்
என்பி தாவொடு பிறந்து பினநளவும்
என்கை ஓதனம் அருந்தியும்
அன்பு தானுடைய னல்லன் என்பதை
தனக்கும் உற்றபகை யல்லவோ?
முதல்வி னைக்கொருவ னுடன்இ யைந்தபொரு
பற்றிஇன்புற முயங்கினும்
அதிகமென்ற பொருள் ஒருவன் வேறுதரில்
அவனையே பொழிப அறிவரோ?
பொதும டந்தையர் தமக்கு மண்ணிலிது
புதுமை யல்லஅவர் புதல்வனும்
விதுரன் இன்றவனொ டுறவு கொண்டதோர்
வியப்பை என்சொலி வெறுப்பதே:

என்று விதுரனை ஏசினான்'' என்பதே.

சீலம் பலஇருப்பத் தேராச் சிசுபாலன்
மாலினிழி பேசொற்றான் வள்ளுவரே!—ஞாலத்(து)
இனிய உளவாக இன்னாத கூறல்
கனிஇருப்பக் காய்கவர்ந் தற்று. (ம)

(அ—ம் முதலியன):—சீலம்-பெருமைக்குணம், தேரா—ஆராயாத, மாலின்—விஷ்ணுவின் அவதாரமான ஸ்ரீகிருஷ்ணனது, இழிபே-சிறுமையையே, சொற்றான்-சொன்னான், ஞாலத்து-இவ்வுலகில், இனிய-இனிய மொ

ழிகளும் விஷயங்களும், உளவாக-இருக்கும் பொழுது, இன்றுத-துன்பு றத்தும் மொழிகளை, கனி-இனியபழம், காய்-கைப்புக்காய், கவர்ந்த (த)ற்று-தின்பதனோடு ஒக்கும்.

"'இனிய கனிகள்' என்றது ஔவையுண்ட நெல்லிக்கனிபோல் அமிழ்தானவற்றை. 'இன்னாதகாய்கள்' என்றது காஞ்சிரங்காய் (எட்டிக் காய்) போல் நஞ்சானவற்றை" என்பது பரிமேலழகர் உரை.

## 73 வள்ளுவர் நேரிசை.

சிசுபாலன் மடலை இழிபு சொற்றது:—சிசுபாலன் என்பான் சேதி தமகோஷன் என்பவனது மகன். பிறக்கும் போதே மூன்று கண்களும் நான்கு கைகளும் கொண்டு பிறந்தவன். பிறந்தவுடன் தாய் தந்தையர் அவன் விகார ரூபத்தைக் கண்டு வருந்துழி, "இக்குழந்தை யார் மடியிலிருக்கும் போது அதன் ஒருகண்ணும் இரண்டு கைகளும் மறையுமோ, அவர் தான் இதற்கு மிருத்யு" என ஆகாய வாணி கூறியது. தமகோஷனுக்கு உற்பாதமான பிள்ளை பிறந்த செய்தி கேட்டு அப்பிள்ளைக் காணப் பல மன்னர்கள் வந்தனர். அச்சமயம் வந்தவர் மடியிலெல்லாம் இக் குழந்தை வைக்கப்பட்டது. அதை ஸ்ரீ கிருஷ்ணன் மடியில் வைத்த மாத்திரத்தில் ஒரு கண்ணும் இருகைகளும் மறைந்தன. உடனே குழந் தையின் தாயாகிய சாத்துவதி, ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி, "தெய்வகதியால் என் பிள்ளைக்கு நீயே எமனாக இருக்கிறாய் அவன் உனக்குச் செய்யும் 100-பிழைகளை என்னை வேண்டி மன்னித்தாயாயின் அவன் உயிர் தப்பக் கூடும். இவ்வரம் எனக்கு அருள்க" என வேண்டினள். ஸ்ரீ கிருஷ்ணனும் அத ற்கு இணங்கினன். பிறரால் தனக்கு மரணபயம் இல்லை என நன்குணர்ந்த சிசுபாலன், பலாக்கும் பல்வேறு தீங்குகள் இயற்றி வருவானாயினன். ஆயி னும், காலபாசம் அவன் கழுத்தில் விழவிருந்தமையால் 'ஸ்ரீகிருஷ்ணன் தன் மிருத்யு' என அறிந்தும், அவனையும் தூஷித்துச் சண்டைக்கிழுக் கலானான். அவ்வாறு அவன் செய்த சந்தர்ப்பம் இது:—

தருமபுத்திரர் ராஜசூய யாகத்தை நிறைவேற்றி "அக்கிர பூஜையாருக்கு செய்கிறது" எனப் பெரியோர்களைக் கேட்க, வியாசர் பீஷ்மர் முதலியோர், புருஷோத்தமனை ஸ்ரீகிருஷ்ணனுக்கே செய்யக் கட்டளையிட்டனர். அவரும் அப்படிச்செய்யவே, க்ஷத்திரியரிற்சிலர் பொறாமைகொண்டு, மனம் வெந்து, பெருமூச்சு விடலாயினர். இதனைச் சகாதேவன் உணர்ந்து 'பொறாமைக்காரர் தலையில் எனது இடதுகால் வைத்தேன். ஜாக்கிரதை' என்று சினந்து கூறினன். சேதிராஜனாகிய சிசுபாலன், பிறப்புமுதல் ஸ்ரீகிருஷ்ணனிடம் கொடிய பகை கொண்டவனாதலின், மனங்கன்றி முகங்கறுத்துக் கண்சிவந்து, மதிமயங்கி,

"கோச்சை இடையர் மகளிருக்குங் கூத்துக் குனித்து, நவநீதப்
பிச்சை நுகரும் இவன், நமக்கு முன்னே பூஜை பெறுவானும்!
ச்சை மறையின் முறை என்னாம்? தருமன் புரிந்த மகம் என்னாம்?
செச்சை வடிவேல் முடியரசர் செங்கோல் என்னாம்? திருஎன்னாம்?

[கோச்சை—ஆகேள் (மேய்க்கும்), நவநீதம்-வெண்ணெய், பச்சை—ஆராய்ச்சி, செச்சை—சிவப்பு.]

நன்று! நன்று!! எனச் சிரித்து, ஸ்ரீகிருஷ்ணனை நோக்கி, "கன்று மேய்க்கும் இடையா! அவர்கள் தான் அறியாமையால் உன்னைப் பூஜித்தார்கள். உன் புத்தி எங்கே போயிற்று? நீ இந்த மகா சபையில் அச்சமில்லாமலும்

உன்குலத்தை யோசியாமலும் பூசனையை ஏற்றுக் கொள்ளலாமா? உனக்கு வெட்கமில்லையோ? என்று கூறி, அவனை 'வஞ்சக' னென்றும், 'சுவாமித்

துரோகி'யென்றும், 'வேதப்புரட்டன்' என்றும், 'கள்ளன்' என்றும், 'பிறர் மனைவிழைந்த பேதை' என்றும், 'பொய்யன்' என்றும் வாய்க்கு வந்தவாறு ஏசினன்" என்பதே.

வள்ளுவர் நேரிசை முதல் பத்து அத்தியாயம் முற்றிற்று.

---

ஸ்ரீ கிருஷ்ண விலாஸம் பிரஸ், திருமங்கலம்.

